# ஃபித்னா குழப்பம் தோன்றிய வரலாறு...

தொகுப்பாசிரியர்:
காயல் **M.Y. ஜெஸ்முதீன்** DCA
(இஸ்லாமிய எழுத்தாளர்)

வெளியீடு:
**முஜ்ஜம்மில் & பிரதர்ஸ்**
எண். 38A/93, கோமான் நடுத்தெரு,
காயல்பட்டணம்-628 204.
தூத்துக்குடி மாவட்டம். செல் : 7200 657757

## நூல் விபரம்


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | ஃபித்னா குழப்பம் தோன்றிய வரலாறு |
| முதல் பதிப்பு | : | அக்டோபர் 2013 |
| தொகுப்பாசிரியர் | : | காயல் **M.Y. ஜெஸ்முதீன்** DCA |
| உரிமை | : | ஆசிரியருக்கு |
| மொழி | : | தமிழ் |
| பக்கம் | | 48 |
| பிரதிகள் | : | 3000 |
| விலை | : | ரூ 20/- |

வெளியீடு - முகவரி :

**முஜ்ஜம்மில் & பிரதர்ஸ்**
எண். 38A/93, கோமான் நடுத்தெரு,
காயல்பட்டணம்-628 204.
தூத்துக்குடி மாவட்டம். செல் : 7200 657757

இந்நூல் கிடைக்குமிடங்கள் :

தங்கள் நாயகம் கலீபா புலவர் **திவான். முகம்மதுநகீப்** ஜலாலீ
எண். 9/1 3வது அவென்யூ, அசோக்நகர், சென்னை - 83.
செல் : 9444218064

ஜனாப் **ஜமால் முஹம்மது**
அல் அமீன் மினி மார்க்கெட்,
எண். 52/12A, சதுக்கை தெரு
காயல்பட்டணம் - 628 204.
அலைபேசி : 80567 86465

ஜனாப் M.**செய்யது அஹ்மது** M.A.
தர்கா பப்ளிஷர்ஸ்
7,4/176A காந்திஜி ரோடு, முதலாவது மாடி,
தஞ்சாவூர் - 613 001.
அலைபேசி : 9841578692
போன் : 04362-270786

காயல்பட்டணம் மஹ்ழரத்துல் காதிரிய்யா அரபிக்கல்லூரியின் பேராசிரியரும், நாடறிந்த பேச்சாளருமான செய்யிதுமார்களின் (தங்கள்) குலவிளக்கின் ஒளிவிளக்கான மௌலானா மௌலவி அல்ஹாஜ் **S.செய்யது அப்துர் ரஹ்மான் பாகவி பாஸில் அஹ்ஸனீ** அவர்கள் அகமகிழ்வுடன் அளித்த

## ஆசியுரை

படைத்தாலும் அல்லாஹ்வின் பெயர் போற்றி அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் புகழ் பாடி ஸலவாத் ஸலாம் உரைத்தவனாய்...

உலகம் தோன்றியதிலிருந்து குழப்பங்களும் தோன்றி வளர்ந்து, மறைந்து மீண்டும் பிறப்பெடுப்பதை வரலாற்று வழிகளில் பார்க்கலாம். கொலை, கொள்ளை போன்ற சமூக குழப்பங்களும், இறை நம்பிக்கைகளையும், செயல்பாடுகளையும் தகர்க்கும் கொள்கை குழப்பங்களும் அரங்கேறுவதை ஒவ்வொரு நாளும் கண்கூடாக பார்க்கின்றோம்.

புனிதமிகு இஸ்லாமிய மார்க்கத்திலும் பல பிரிவினர்களாக கொள்கை குழப்பங்கள் உருவாகுவதை உலகம் உன்னிப்பாக கவனிக்கின்றது. புனித மிகு சுன்னத் வல்ஜமாஅத்தினர் இக் குழப்பங்களை பார்த்து ஆச்சரியப்படாமல் அண்ணல் எங்கள் கோமான் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீதுள்ள ஈமானை புதுப்பித்து மெய்ப்படுத்துகின்றார்கள்.

காரணம் எல்லா குழப்பவாதிகளையும் 1400 ஆண்டுகளுக்கு முன்பே கண்மணி நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அற்புதமாக படம் பிடித்தும், அற்புதமாக அடையாளப்படுத்தியுமுள்ளார்கள்.

ஈமானை உறுதிபடுத்தி சுன்னத்வல் ஜமாஅத்தின் பாசத்தை அதிகப்படுத்தும் அடையாளங்களை புகாரி, முஸ்லிம் போன்ற கிரந்தங்களின் மொழி பெயர்ப்பில் சீரிய ஆய்வுசெய்து சகோதரர் ஜெஸ்முத்தீன் அவர்கள் சிறப்பாக தொகுத்துள்ளார்கள். அவர்களின் பணி பாராட்டி துஆச் செய்யவைக்கின்றது. அல்லாஹ் இத்தகைய பணியை ஏற்று உருவெடுத்த கொள்கை குழப்பங்களை விட்டும் நம்மை பாதுகாப்பானாக! சத்தியத்தை சத்தியமாக விளங்கி செயல்படவும், அசத்தியத்தை அசத்தியமாக புரிந்து தவிர்ந்து வாழவும் அல்லாஹ் அருள் புரிவானாக! சத்தியக் கூட்டத்தினருடன் நம்மை வாழ வைப்பானாக! மேலும் மறுமையில் சாலிஹீன்களுடன் ஒன்றாக இருக்கச் செய்வானாக! ஆமீன், யாரப்பல் ஆலமீன்! வஸ்ஸலாம்

அன்புடன்...

மௌலவி **S.செய்யது அப்துர் ரஹ்மான் அஹ்ஸனீ**

காயல்பட்டணம்

10.08.2013

அஹ்லுஸ் ஸுன்னா பத்திரிகை ஆசிரியர், நாடறிந்த பேச்சாளர் மௌலானா, மௌலவி **A.R.பரீதுத்தீன் மஹ்ழரி M.A.** அவர்கள் மனமுவந்தளித்த

## மதிப்புரை

"(நபியே!) எந்த மக்கள் அல்லாஹ்வையும், மறுமை நாளையும் (மெய்யாகவே) நம்பிக்கை கொண்டிருக்கின்றார்களோ அவர்கள், எவர்கள் அல்லாஹ்வையும் அவனுடைய திருத்தூதரையும் பகைத்துக் கொண்டார்களோ (அவர்களை நேசிக்க மாட்டார்கள்.) அவர்கள் தங்களுடைய பெற்றோர்களாக இருந்தபோதிலும் அல்லது தங்களுடைய சந்ததிகளாக இருந்த போதிலும் உறவினர்களாக இருந்தபோதிலும் அவர்களுடன் நேசம் கொண்டு உறவாடுவதை நீங்கள் காணமாட்டீர்கள்..."

அல்குர்ஆன் (58:22) சூரா:அல்முஜாதலா

மேலுள்ள வசனம் ஈமான் குறித்து ஒரு மாபெரும் விழிப்புணர்வை ஏற்படுத்தக் கூடியதாகும்.

அல்லாஹ்வையும் அவனுடைய திருத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களையும் பகைத்துக் கொண்டவர்களுக்கு ஈமான் இல்லை என்பதை நாம் அறிவோம். ஆனால் இந்த வசனம் அல்லாஹ் ரஸுலைப் பகைத்துக் கொண்டவர்களை யார் நேசிக்கிறார்களோ அவர்களுக்கு ஈமான் இல்லை என்பதை தெளிவுபடுத்தியுள்ளது. அத்தகையவர்கள் யார்?

அவர்கள் எப்படிப்பட்டவர்கள்? என்ற தெளிவான அடையாளங்களையும் அவர்கள் செய்துள்ள குழப்பங்கள் என்னவென்றும் மிகத் தெளிவாக பட்டியலிட்டுள்ளார், இந்நூலாசிரியர் M.Y.காயல் ஜெஸ்முத்தீன்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் காலத்தில் வாழ்ந்த துல் குவைஸிரா முதல் இக்கால எண்ணிலடங்கா பல குழப்பங்களை ஏற்படுத்தி நம்முடைய ஈமானுக்கு ஊறுவிளைவிக்கும் இஸ்லாமியப் பெயர் தாங்கிய பல இயக்கங்களை மிகத் தெளிவாகவும் வெளிப்படையாகவும் தைரியமாகச் சுட்டிக் காட்டியுள்ள நூலாசிரியர், இச்சிறுநூலை உருவாக்குவதற்கு பெரிதும் உழைத்துள்ளார் என்பதை அவர் எடுத்துவைக்கும் ஆதாரங்களின் மூலம் நாம் விளங்க முடிகிறது. இக்காலத்தில் ஆலிம்கள் கூட செய்யத்தயங்கும் இப்பணியை இந்த இளம் எழுத்தாளர் செய்வதற்கு முனைந்திருப்பது பாராட்டுக்குரியதேயாகும்.

இவருடைய எழுத்துப்பணி எக்காலமும் தொடரவும், அல்லாஹ் அவற்றை அங்கீகரிக்கவும் துஆ செய்கிறேன்.

இவண்

மௌலவி **A.R.பரீதுத்தீன் மஹ்ழரி**

சென்னை - 11

10.09.2013

## என்னுரை

ஹம்து ஸலவாத்தின் பரக்கத்தினால்...

எல்லாம் வல்ல அல்லாஹ் சுப்ஹானஹூத்தஆலாவின் பேரருளாலும், ஈருலக வேந்தர் மக்கத்து மன்னர், மதீனத்து மாமன்னர் எங்களை ஈடேற்றும் காவலர். உயிரினும் மேலான பயகம்பர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் துஆ பரக்கத்தினாலும் எங்களின் மெய்ஞ்சான மேதை சற்குரு நாதர் கௌதுல் அஃலம் முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானி றளியல்லாஹு அன்ஹு அவர்களின் நல்லாசியாலும், அனைத்து வலிமார்கள், ஸஹாபாக்கள், இமாம்கள், நாதாக்கள், ஷுஹதாக்கள், சாலிஹீன்கள், சித்தீக்கீன்கள், நல்லடியார்கள் ஆகியோர்களின் நல்லாசிகளோடும் இச்சிறியோன் ஃபித்னா - குழப்பம் தோன்றிய வரலாறு என்னும் சிறிய நூலை தொகுத்து வடித்து தந்துள்ளேன். இந்நூல் இன்றைய குழப்பமான காலத்திற்கு தேவையான பொக்கிஷமாகத் திகழும் என்பதில் கிஞ்சிற்றும் ஐயமில்லை.

இச்சிறிய நூலில் பூமான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் காலம் முதல் இன்றைய காலமுதல் நாம் கண்ட குழப்பங்களை மிக சுருக்கமாக வரிசைப்படுத்தி தந்துள்ளேன். இது சிறந்த சிந்தனையுடையோருக்கு, தெளிவை தேடி அலைகின்றவருக்கு நல்வழிகாட்டியாகயிருக்கும்.

இச் சிறப்பு மிகுந்த நூலினை சரிபார்த்து, சீர்படுத்தி, மதிப்புரை என்னும் ஆசியுரை வழங்கிய செய்யிதுமார்களின் (துங்கள்) குடும்பத்து குலவிளக்கான பாசமும், கண்ணியமும் நிறைந்த மௌலானா மௌலவி அல்ஹாஜ் S.செய்யது அப்துர் ரஹ்மான் பாகவி ஃபாஸில் அஹ்ஸனீ (பேராசிரியர் - மஹ்ழரத்துல் காதிரிய்யா அரபிக் கல்லூரி - காயல்பட்டணம்) அவர்களுக்கும், எனது அருமை மிகுந்த, பாசம் நிறைந்த நண்பர் வஹ்ஹாபிகளான தேவ்பந்தீய தப்லீக்கர்களுக்கு சிம்ம சொப்பனமாக திகழ்பவர், மௌலானா மௌலவி A.R.பரீதுத்தீன் மஹ்ழரி M.A. (அஹ்லுஸ் சுன்னா மாத இதழ் ஆசிரியர் - சென்னை) அவர்களுக்கும், இந்நூல் வெளிவர பெரிதும் உதவிய அனைவருக்கும் எனது மனமார்ந்த நன்றியினைக் காணிக்கையாக்கி நிறைவு செய்கின்றேன். வஸ்ஸலாம்!

ஆஷிக்கே ரசூல்

**M.Y.ஜெஸ்முதீன்** DCA

காயல்பட்டணம்

# ஃபித்னா – குழப்பம் தோன்றிய வரலாறு...!

**முன்னுரை :**

இன்றைய நவீன உலகில் இஸ்லாமிய சமுதாயம் சந்தித்த பல்வேறு குழப்பவாதிகளையும் (மார்க்கத்தின் பெயரால்) உலாவந்தவர்களையும், அவர்களின் இழி செயல்களையும், ஈமானுக்கு வேட்டு வைக்கின்ற வஹ்ஹாபிய விஷக் கருத்துக்களையும், பூமான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் ஜீவிய காலம் முதல், ஸஹாபாக்கள், தாபியீன்கள், தபவுத் தாபியீன்கள், இமாம்கள் காலம் வரையிலும் மேலும் அவர்களின் காலம் முடிந்ததின் பின்னர் இந்த சமுதாயம் சந்தித்த பல்வேறு கொள்கை குழப்பங்களையும் நாம் சற்று ஆழமாக பார்த்து நமது ஈமானை புதுப்பித்துக் கொள்ளும் நோக்கில் உண்மையான அஹ்லுல் சுன்னா வல்ஜமாஆ – கொள்கையின் படி நிலைத்து வாழவும் உதவியாய் இக்கட்டுரையை எழுதுகின்றேன். குழப்பவாதிகளின் குழப்பங்களை தொடராக சற்று உற்று நோக்குவோமா?

**முத்து நபியின் ஜீவிய காலத்தின் போது :-**

i) நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தங்களது தோழர்களுடன் இருக்கும் போது, இவ்வாறு துஆச் செய்தார்கள்! அல்லாஹும்ம வபாரிக்லனா வஷாமினா! வஎமனினா! யா அல்லாஹ்! (ஷாம் நாட்டுக்கு பரக்கத் செய்வாயாக! எமன் நாட்டுக்கும் பரக்கத் செய்வாயாக!) கூடியிருந்த தோழர்கள் யாரசூலல்லாஹ்! பக்கத்து நாடான நஜ்த் தேசத்திற்க்கும் துஆச் செய்யுங்களேன் என்று கேட்டனர். இவ்வாறு மூன்று முறை துஆ செய்ததும்; தோழர்கள் மீண்டும் மீண்டும் வினவியதும் பின்பு பதில் சொன்னார்கள்; நஜ்த் தேசத்திலிருந்து தான் ஃபித்னாக்களும், அதிர்ச்சிகளும் உண்டாகும். மேலும் ஷைத்தானின் கொம்பு உதயமாகும் என்று சொன்னார்கள்.

அறிவிப்பு : செய்யிதினா அப்துல்லாஹ் இப்னு உமர் (றளியல்லாஹு அன்ஹு)
நூல் :- புகாரி ஹ.எண் : (1307, 7094)

ii) ஒரு முறை அண்ணல் எங்கள் ஆருயிர் கோமான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் போரில் கிடைத்த 'கனீமத்' என்னும் வெற்றிப் பொருட்களைப் பங்கீடு செய்து கொண்டிருக்கும் போது; தோழரோடு தோழராக (நடித்து கொண்டிருந்த) பனூதமீம் கிளையைச் சார்ந்த துல்குவைஸிரா தமீமி என்றவன் நபியே! நீங்கள் நீதமாகப் பங்கீடு செய்யுங்கள்! (யஹு'திக்கும் யாமுஹம்மத்!) என்று கூறினான். இதைக் கேட்ட நபியவர்கள் கடும் கோபத்துடன் நீ நாசமாகுவாயாக! நான் நீதமாக நடக்காவிடில் வேறு யார்தான் நீதமாக நடந்துவிடப் போகிறார்கள்? இவற்றை கண்ணுற்றுக் கொண்டிருந்த உமர் றளியல்லாஹு அன்ஹு அவர்கள் நாயகமே! எனக்கு உத்தரவு தாருங்கள் அவனின் கழுத்தைச் சீவி விடுகின்றேன் என்றார்கள். அப்பொழுது; பூமான் நபியவர்கள் உமரே! அவனை விட்டுவிடுங்கள்! ஏனென்றால் இவனிலிருந்தும் (இந்த மார்க்கத்தை சீர்குலைக்கும் சண்டாளர்கள்) வர இருக்கின்றார்கள். மேலும் அவர்கள் தொழும் தொழுகையும், அவர்கள் நோற்கும் நோன்பும், உங்களின் தொழுகையுடனும், நோன்பினுடனும் ஒப்பீடு செய்து பார்த்தீர்களேயானால் உங்கள் தொழுகை நோன்பெல்லாம் மிக அற்பமானதாகவே கருதுவீர்கள். (அந்தளவுக்கு அவர்களின் வணக்கங்கள் அமைந்திருக்கும்) குர்ஆன் ஓதுவார்கள் ஆனால் அது அவர்களின் தொண்டைக் குழியைத் தாண்டி இதயத்தின் பால் செல்லாது. வேட்டைப் பிராணியிலிருந்து குறி தவறி பாய்ந்து செல்லும் அம்பைப் போல அவர்கள் சன்மார்க்கத்தை விட்டும் வெளியேறி விடுவார்கள். சிலை வணங்கிகளை விட்டு விடுவார்கள், இஸ்லாமியர்களையே கொலை செய்வார்கள். நான் அவர்கள் வாழும் நாட்களை அடைந்தால் ஆது கூட்டத்தார் அழிக்கப்பட்டதைப் போன்று அவர்களை நிச்சயம் நான் அழிப்பேன் என்று சொன்னார்கள்.

அறிவிப்பு : செய்யிதினா அபூஸயீத்தில் அல்குத்ரி (றளியல்லாஹு அன்ஹு)
மிஷ்காத் - பாபுன்பில் முஃஜிஸாத்து (பாடம்)
நூல் :- புகாரி ஹ. எண் : (3610, 7432) முஸ்லிம் (ஹ.எண் : 1064)
அஹ்மது 3/56, இப்னுமாஜா (ஹ. எண். : 172)

iii) நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சொன்னார்கள்:

இறை நம்பிக்கை எமன் நாட்டைச் சேர்ந்ததாகும். குழப்பம் (பித்னா) இங்கே கிழக்கில் உள்ளது. இங்குதான் ஷைத்தானின் கொம்பு உதயமாகும்.

அறிவிப்பு : செய்யிதினா அபூஹுரைரா றளியல்லாஹு அன்ஹு
நூல் :- புகாரி ஹ.எண். (3301, 4389, 4390)

iv) நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சொன்னார்கள்:

கிழக்கிலிருந்து ஒரு கூட்டம் வெளியாகும். அவர்கள் குர்ஆனை ஓதுவார்கள். அது அவர்களின் தொண்டைக் குழிக்கு கீழே இறங்காது. ஒவ்வொரு கூட்டமும் மறையும் தருவாயில் இன்னொரு கூட்டம் தோற்றம் எடுக்கும். இவ்வாறு அவர்கள் தஜ்ஜால் வெளிப்படும் வரை தோன்றிக் கொண்டேயிருப்பார்கள்.

அறிவிப்பு : அப்துல்லாஹ் இப்னு அம்ரு றளியல்லாஹு அன்ஹு
நூல் : அஹ்மது (6952), முஸ்னப் அப்துர் ரஜ்ஜாக் (20, 790)

v) நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சொன்னார்கள்:

"கடைசிகாலத்தில் திருக்குர்ஆனை நன்றாக விளங்கியிருக்கின்றோம். என்ற ஒரு கூட்டம் வருவார்கள். அந்த காலத்தை உங்களில் யாராவது அடைந்தால் அவர்களிடமிருந்து பாதுகாவல் தேடிக் கொள்ளட்டும்."

அறிவிப்பு : செய்யிதினா அபூஉமாமா றளியல்லாஹு அன்ஹு
நூல் :- அபூநயீம்

vi) நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சொன்னார்கள்:

"இறுதிகாலத்தில் பெரும் பொய்யர்களான தஜ்ஜால்கள் தோன்றுவார்கள். நீங்களோ, உங்கள் மூதாதையரோ கேள்விப்படாத (ஹதீஸ்களை) செய்திகளை உங்களிடம் சொல்வார்கள். ஆகவே! அவர்களைக் குறித்து உங்களை நான் எச்சரிக்கை செய்கின்றேன். அவர்கள் உங்களை வழிகெடுத்து விடவோ, குழப்பத்தில் ஆழ்த்திவிடவோ நீங்கள் இடமளித்து விட வேண்டாம்."

அறிவிப்பு : செய்யிதினா அபூஹுரைரா றளியல்லாஹு அன்ஹு
நூல் : முஸ்லிம் ஹ.எண். (13, 14) மிஷ்காத் (பாகம் - 1, பக்கம் - 28)

**vii) செய்யிதினா அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் றளியல்லாஹு அன்ஹு அவர்கள் சொன்னார்கள்:**

**"நிச்சயமாக! ஷைத்தான் மனித உருவில் மக்களிடையே வந்து பொய்யான ஹதீஸ்களை எடுத்துரைப்பான். அதன் பின்னர்; மக்கள் கலைந்து செல்வார்கள். அப்போது அவர்களில் ஒருவர் யாரோ ஒரு மனிதர் ஒரு ஹதீஸ் சொல்வதை நான் கேட்டேன். அவரின் முகம் எனக்குத் தெரியும். ஆனால், அவருடைய பெயர் என்னவென்று எனக்குத் தெரியாது என்று கூறுவார்."**

அறிவிப்பு : செய்யிதினா ஆமிர் பின் அபதா றளியல்லாஹு அன்ஹு
நூல் : முஸ்லிம் (ஹ.எண். 15) - (பாகம் - 1)

**viii) நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சொன்னார்கள்:**

**"நான் தூங்கிக் கொண்டிருக்கும் போது என் கைகளில் இரண்டு தங்க காப்புகளைக் கண்டேன். அவை எனக்கு மிக பாரமாக இருந்தன. அதை ஊதி விடுவீராக! என்று எனக்குக் கூறப்பட்டது. நான் ஊதியவுடன் அவை பறந்து விட்டன! இந்த கனவு அஸ்வத் அல் அன்ஸீ மற்றும் யமாமா நாட்டின் முஸைலமாபின் கத்தாப் ஆகிய போலி நபிகள் பற்றியது என்று நான் விளங்கிக் கொண்டேன்."**

அறிவிப்பு : செய்யிதினா அபூஹுரைரா றளியல்லாஹு அன்ஹு
நூல் : புகாரி ஹ.எண். (3621, 4374, 4375, 4379)

**ix) நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சொன்னார்கள்:**

**"எனக்குப் பின் முப்பது பொய்யர்கள் தோன்றுவார்கள். அனைவரும் தன்னை நபி என்று கூறிக் கொள்வார்கள்."**

அறிவிப்பு : செய்யிதினா அபூஹுரைரா (றளியல்லாஹு அன்ஹு)
நூல் : புகாரி ஹ.எண். (7121)

**குறிப்பு :** பூமானின் அறிவிப்பின் படி, முஸைலமா, அஸ்வத் அல் அன்ஸீ, துலைஹா, முக்தார், ஸஜாஹ் என்ற பெண், மிர்ஸா

குலாம் அஹ்மது, ஹாரிஸ் போன்ற போலிகள் நபிகள் என பிரச்சாரம் செய்தனர். இவர்கள் அனைவரும் கேவலப்படுத்தப்பட்டு இறந்தார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

x) “ஒரு முறை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஒரு கோட்டைக் கீறிவிட்டு இதுதான் நேரான பாதை என்றார்கள். பின்னர் அக்கோட்டில் வலது பக்கமாகவும், இடது பக்கமாகவும் சில கோடுகளை கீறிவிட்டு இரு பாதைகளிலும் ஷைத்தான் இருந்து கொண்டு அழைத்துக் கொண்டிருக்கின்றான். எனக் கூறிவிட்டு (6:154) இறைவசனத்தை ஓதிக் காட்டினார்கள். நிச்சயமாக! இதுவே நேரான என்னுடைய வழியாகும். எனவே, இதனையே நீங்கள் பின்பற்றுங்கள். இதற்கு மாறுபட்ட வழிகளைப் பின்பற்றாதீர்கள். வேறு வழிகளை பின்பற்றுவீர்களேயானால் சத்திய வழியை விட்டும் உங்களை அது பிரித்து விடும். இது நீங்கள் இறைவனுக்கு அஞ்சியவர்களாக நடந்து கொள்ளும் பொருட்டு அல்லாஹ்! உங்களுக்கு இவற்றைச் வஸிய்யத் செய்கின்றான்.”

நூல் : இப்னுமாஜா (பாகம்-1), (பக்கம்-105)
ஹாகிம் (பாகம்-2), (பக்கம்-318)

xi) நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சொன்னார்கள்.

“12-ம் நூற்றாண்டில் ‘பனூஹனீபா’ என்னும் வம்சத்தில் ஒரு மனிதன் தோன்றுவான். அவனது செயல்முறை மிருகங்களைக் போன்றிருக்கும். அவன் காய்ந்தவை அனைத்தையும் தின்று விடுவான். அக்காலத்தில் கொலையும், இரத்தச் சேதமும் மிக அதிகமாக இருக்கும். அவன் முஸ்லிம்களது உடமைகளை தனக்கு ஹலாலென்று எண்ணி கொள்ளை கொள்வான். அப்பொருளைக் கொண்டே வாணிபமும் செய்வான். இன்னும் முஸ்லிம்களை கொலை செய்வதை ஹலால் என்று எண்ணி கொல்வதோடு அதில் பெருமையும் அடிப்பான். ஒரு மாபெரும் மாற்றம் நிகழும். அதில் கீழ்த்தரமானவர்களெல்லாம் திரண்டு மிகைத்து விடுவார்கள். தாழ்ந்த பிறப்புள்ளோர் அவனுக்கு வழிப்பட்டு நடப்பர். எவ்வாறு நாய் தனது

**எஜமானனுக்குப் பின்னால் வாலை ஆட்டிக் கொண்டு செல்கிறதோ அது போன்று அவர்கள் அவனுக்குப் பின்னால் செல்வார்கள்."**

அறிவிப்பு : இப்னு அப்பாஸ் (றளியல்லாஹு அன்ஹு)
நூல் : ஜல்லல் முலாம் கபீரத்தி அலன் நஜ்தீ அழல்லல் அவாம்

**மேற்கண்ட அனைத்து பொன் மொழிகளின் மூலம் பூமான் நபியவர்கள் தங்களின் ஜீவிய வாழ்க்கையின் போதே குழப்பவாதிகளை (ஃபித்னா) இனங்காட்டி விட்டு இவர்களின் மாய வலையில் வீழ்ந்து விடக் கூடாது என்றும் நமக்கு எச்சரிக்கை செய்துள்ளார்கள். அதனையடுத்து ஸஹாபாக்களின் எச்சரிக்கையினை சற்று உற்று நோக்குவோமா?**

**ஸஹாபாக்களின் ஜீவிய நிலையின் போது:-**

செய்யிதினா அப்துல்லாஹ் இப்னுஅப்பாஸ் றளியல்லாஹு அன்ஹு அவர்கள் சொன்னார்கள்:

"உமர் றளியல்லாஹு அன்ஹு அவர்கள் ஒரு முறை உபதேசம் செய்தார்கள். இந்த உம்மத்தில், சிலர் வருவார்கள். கல்லால் எறிந்து கொல்லும் இஸ்லாமிய சட்டத்தை பொய்யாக்குவார்கள். தஜ்ஜாலை பொய்படுத்துவார்கள். இன்னும் விதியின் மூலமாக ஏற்படும் வேதனைகளையும், ஷஃபாஅத்தையும் பொய்ப்படுத்துவார்கள். மேலும் நரகத்திலிருந்து ஒரு கூட்டம் வெளியேறும் என்பதையும் பொய்ப்படுத்துவார்கள்."

நூல் : பைஹகீ

செய்யிதினா அப்துல்லாஹ் இப்னு அம்ரு றளியல்லாஹு அன்ஹு அவர்கள் சொன்னார்கள்:

"ஒரு நாள் பகலில் நபி ஸல்லல்லாஹு அலைஹு வஸல்லம் அவர்களிடம் சென்றேன்; அப்பொழுது இரு நபர்கள் ஒரு இறைவசனம் சம்மந்தமாக மாறுபட்ட கருத்தினை சொல்லி கொண்டிருந்தனர். முகத்தில் கோபத்தின் குறி தோன்ற நபியவர்கள் அங்கு வந்தார்கள். உங்களுக்கு முன்னிருந்தவர்கள் எல்லாம் நாசமடைந்தது அவர்களுக்கு வழங்கப்பட்ட வேதத்தில் பிணங்கிக்

கொண்டு இருந்ததினால் தான் என்று மிகக் கடுமையாக எச்சரிக்கை செய்தார்கள்."

நூல் : முஸ்லிம்

செய்யிதினா ஸுலைமானுப்னு யஸார் றளியல்லாஹு அன்ஹு அவர்கள் சொன்னார்கள்:

"அப்துல்லாஹ் இப்னு ஸுபைய்யிஃக் என்ற ஒரு நவீனவாதி உமர் றளியல்லாஹு அன்ஹு அவர்களின் ஆட்சி காலத்தில் மதீனாவிற்கு வந்து குர்ஆனிலுள்ள சில வசனங்களில் கூறப்பட்டுள்ள இறைவனின் கை, முகம் என்றெல்லாம் பொது மக்களால் இலேசான முறையில் யதார்த்தமான அர்த்தத்தை விளங்க முடியாத முதஷாபிஹான வசனங்களை கையில் எடுத்துக் கொண்டு இறைவனுக்கு நம்மைப் போன்ற கை, முகம், உடல் போன்றவைகள் உள்ளன என்று கூறி மக்களை குழப்பி விட நாடி அவை குறித்து மக்களிடம் பலகேள்விகள் கேட்டுத் திரிந்தான்."

இதனை கேட்டறிந்த உமர் றளியல்லாஹு அன்ஹு அவர்கள் அவனை அழைத்து தயாராக வைத்திருந்த பேரீத்த மட்டையால் தலையில் இரத்தம் வரும் வரை அடித்து அனுப்பினார்கள். காயம் ஆறும் வரை அமைதியாக இருந்த அந்த நவீனவாதியான அப்துல்லாஹ் இப்னு ஸுபைய்யிஃக் மீண்டும் அதுபோன்று மக்களை குழப்பும் வேலையை செய்ததும்; மீண்டும் உமர் றளியல்லாஹு அன்ஹு அவர்கள் அவனை அழைத்து அவனது சொந்த ஊருக்கு துரத்தியடித்து மேலும் அன்றைய அந்த நகரத்தின் கவர்னராகயிருந்த அபூமூஸல் அஷ்அரி றளியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு, ஒரு கடிதம் எழுதினார்கள். அதில் மதீனாவில் இருந்து தங்களது ஆட்சிக்குட்பட்ட பகுதிக்கு ஒரு நவீனவாதி வருகிறான். இவனிடம் முஸ்லிம்கள் யாரும் எந்த விதமான தொடர்பும் வைத்துக் கொள்ளக் கூடாது. அவனோடு கலந்துறவாடவோ, சேர்ந்து அமரவோ, எந்த முஸ்லிமையும் அனுமதிக்கக் கூடாது என கட்டளையிட்டு இருந்தது.

நூல் : அல்-இத்கான் (பாகம்-2, பக்கம்-5)

**கலீபாக்களின் இறுதி நிலையும், குழப்பமும்:-**

1) கலீபா அபூபக்கர் சித்தீக் றளியல்லாஹு அன்ஹு அவர்கள் தமது ஆட்சி அரியனை ஏறிய பின்னர் சுமார் 2½ வருடங்கள் ஆட்சி புரிந்தார்கள். இதில் பல காலங்கள் ஜக்காத்தை தரமறுத்த இஸ்லாமிய மக்களிடையே போர் புரிவதிலும், பிரச்சனைகள், குழப்பங்கள் தீர்ப்பதிலும் இருந்தது. அவர்களின் மறைவு ஹிஜ்ரி 13-ம் ஆண்டு ஜுமாதல் ஊலா திங்கள் கிழமை நடந்தது. அன்னாருக்கு அப்போது வயது 63ஆக இருந்தது. (புத்ஹுல் பாரி)

2) கலீபா உமர் றளியல்லாஹு அன்ஹு அவர்கள் ஆட்சி அரியனை ஏறி சுமார் 10 வருடங்கள் சிறப்பாக ஆட்சி புரிந்தார்கள். குழப்பவாத கூட்டங்களின் கொட்டங்களை உடனுக்குடன் சீர் செய்தார்கள். கலீபா அவர்களின் காலத்தில் அந்நிய நாட்டு அடிமைகள் (காபிர்கள்) உட்பட எவரும் மதீனா நகருக்குள் நுழைய தடை விதித்து இருந்தார்கள். இந்த நிலையில் முஃகிரா பின் ஷுஅபா றளியல்லாஹு அன்ஹு அவர்கள் தம் அடிமையான அபூலுஃலுஆ ஃபைரோஸ் - என்ற (முனாஃபிக்) அனுப்பி உமர் றளியல்லாஹு அன்ஹு அவர்களே! இவனை தாங்கள் வைத்துக் கொள்ளுங்கள்! இரும்பு, தச்சு போன்ற வேலைகள் தெரிந்தவன் அதனால் நாட்டுக்கு நன்மைகள் கிடைக்கும் என்று சொல்லி அனுமதி கோரினார்கள். கலீஃபாவும் அனுமதி வழங்கினார்கள். உமர் றளியல்லாஹு அன்ஹு அவர்களின் அடிமையான அபூலுஃலுஆ, உமர் றளியல்லாஹு அன்ஹு அவர்களை சுப்ஹு தொழுகையின் போது (கலீபா தொழுகை நடத்தும் போது) தன் இடுப்பில் மறைத்து வைத்திருந்த (பிச்சுவாக் கத்தியால்) குத்தினான். முன்பக்கம் குத்தியது பின்பக்கம் வந்தது. பிடிக்கச் சென்ற தோழர்களை எல்லாம் குத்தினான் அந்த கொடியவன். சுமார் 13 நபரை தாக்கினான். பின்னர் அவன் தன்னைத் தானே அறுத்து கொண்டு இறந்து போனான். அபூலுஃலுஆ, உமர் றளியல்லாஹு அன்ஹு அவர்களைக் கொல்ல காரணம் என்னவெனில், தன்னுடைய எஜமானார் முஃகிராபின் ஷுஅபா றளியல்லாஹு அன்ஹுக்கும் அவனுக்கும் இடையே இருந்த தகராறில், தனக்குச் சாதகமாக தீர்ப்பு சொல்லாமல் கலீபா அவர்கள் ஷுஅபா றளியல்லாஹு அன்ஹு அவர்களுக்கே சொல்லி

விட்டார்களே! என்று வஞ்சத்தின் அடிப்படையில் தான் பழிதீர்த்தேன் என்றான். இந்த கொடிய மாபாதக செயல் ஹிஜ்ரி-23ம் ஆண்டு துல்ஹஜ் திங்கள் கிழமை நடந்தது. வீரத்தின் விளைநிலம் உமர் றளியல்லாஹு அன்ஹு அவர்கள் தங்களது 63ம் வயதில் இறைவனின் முன் ஷஹீதாகச் சென்றார்கள். இன்னாலில்லாஹி... அவர்களின் மறைவுக்குப் பின்னர் குழப்பம் (ஃபித்னா) உடைய கதவு உடைக்கப்பட்டு விட்டது. சமுதாயத்தில் பலகுழப்பங்கள் வந்தன.

ஆதாரம்:- (பத்ஹுல்பாரி, இர்ஷாதுல் ஸாரீ, புகாரி ஹ.எண். 3700)

3) <u>கலீபா உஸ்மான் றளியல்லாஹு அன்ஹு</u> அவர்கள் ஆட்சி அரியனை ஏற்று சுமார் 12 வருடங்கள் சிறப்பாக ஆட்சி புரிந்தார்கள். இவர்களின் ஆட்சியின் போதே இஸ்லாமிய பெயர் தாங்கிகள் நிறையே காணப்பட்டனர். கலகக்காரர்கள் அவ்வப்போது கலகம் செய்தனர். இவை அனைத்தையும் கலீபா அவர்கள் கண்டித்து ஒடுக்கி வைத்தார்கள். மேலும் அரசியல் குழப்பத்தின் காரணமாக அவர்களின் வீடு பல நாள்கள் முற்றுகையிடப்பட்டன.

ஹிஜ்ரி-35ம் ஆண்டு துல்ஹஜ் மாதம் அன்னார் ஷஹீதாக்கப்பட்டார்கள். இன்னாலில்லாஹி.... இதிலும், இதனையடுத்த பல்வேறு குழப்பங்களிலும் நபித்தோழர்கள் பலர் உயிரிழந்தனர். பத்ருப்போரில் கலந்து கொண்ட நபித்தோழரான சஅத்பின் அபீவக்காஸ் றளியல்லாஹு அன்ஹு அவர்களும் கூட இந்த குழப்பத்தை தொடர்ந்தே உயிரிழந்தார்கள். (இன்னாலில்லாஹி....)

ஆதாரம்:- (பத்ஹுல்பாரி, உம்தத்துல் க்காரீ

4) <u>கலீபா அலி றளியல்லாஹு அன்ஹு</u> அவர்கள் ஆட்சி அரியணை ஏற்று 5 வருடங்கள் சிறப்பாக ஆட்சி புரிந்தார்கள். கலீபா அவர்களின் ஆட்சியின் போதும் பல்வேறு விதமான கொள்கை குழப்பவாதிகள் தோன்றினார்கள். அவற்றில் முதன்மையானது, ராஃபிளியா கூட்டம் இதன் தலைவன் அப்துல்லா இப்னு ஸபா என்ற யூதனாகும். இவன் நபியை குறைகூறி, மார்க்கத்தை பிளவுபடுத்தி மக்களிடையே குழப்பங்களை

உருவாக்கினான். மேலும் கலீபா அவர்கள் ஆட்சி புரிந்த கூஃபா நகருக்கு வந்து கலீபா அலி றளியல்லாஹு அன்ஹு அவர்களை அளவு கடந்து புகழ்ந்து தாங்கள் தான் முதல் கலீபாவுக்கு தகுதியானவர் என்று சொன்னான். உடனே கலீபா அவர்கள் அவனை பிடித்து சிரச்சேதம் செய்யும்படி ஆணையிட்டார்கள். அந்நிய நாட்டுக்கு தப்பி ஓடி விட்டான்.

கலீபா அவர்கள் ஹிஜ்ரி 35-ம் ஆண்டு முதல் ஹிஜ்ரி 40 வரை வாழ்ந்தார்கள். ஹிஜ்ரி 40 ரமளான், திங்கள்கிழமை தங்களது 63வது வயதில் ஷஹீதாக்கப்பட்டார்கள். (இன்னாலில்லாஹி...).

ஆதாரம்:- பத்ஹுல்பாரி, ஷரஹுபிக்ஹுல் அக்பர் (பக்கம்-85)
அல்கிலாபதுர் ராஷிதா (பக்கம்- 148)

5) ஹஸன் றளியல்லாஹு அன்ஹு அவர்கள் ஆட்சி அரியனை தங்களது தந்தை அலி றளியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு பின்பு ஏற்பார்கள் என எதிர்பார்க்கப்பட்டது. அந்த நேரத்தில் ஹஸன் றளியல்லாஹு அன்ஹு அவர்கள் ஆட்சி பொறுப்பை கைவிட்டு விட்டார்கள். இதனால் இரண்டு அணிகளுக்கிடையே நடைபெறவிருந்த மோதல் தவிர்க்கப்பட்டது. அவ்வாறு சமாதானமாக செய்து இருந்தும் சூழ்ச்சியாளர்களால் விஷம் கொடுக்கப்பட்டு ஹிஜ்ரி 50-ம் ஆண்டு மதீனாவில் உயிரிழந்தார்கள். (இன்னாலில்லாஹி...). ஹஸன் றளியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு அபூமுஹம்மத் என்ற சிறப்பு பெயருமுண்டு. நபியவர்கள் முன்னர் அறிவிப்பு செய்தபடியே மேற்கண்ட நிகழ்வுகள் நடைபெற்றுவிட்டது.

ஆதாரம்:- (பத்ஹுல்பாரி, உம்தத்துல்காரீ, புகாரி ஹ.எண். 3746)

6) ஹுஸைன் றளியல்லாஹு அன்ஹு அவர்கள் யஸீத் பின் முஆவியா ஆட்சிக்கு ஆதரவு அளிக்க மறுத்து விட்டார்கள். மேலும் அலி றளியல்லாஹு அன்ஹு அவர்களின் தீவிர ஆதரவாளர்கள் எனப்படுவோர் கூஃபாவிலிருந்து ஹுஸைன் றளியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு அழைப்பு விடுத்து கடிதங்கள் எழுதினர். மக்காவிலிருந்து கூஃபாவிற்கு வந்து விடுங்கள் உங்களுக்கு நாங்கள் வாக்களிக்கத் தயார் என்று அவர்கள்

எழுதியிருந்தார்கள். ஹுஸைன் றளியல்லாஹு அன்ஹு அவர்கள் மக்காவிலிருந்து கூஃபா புறப்பட்டார்கள். இதற்கிடையில் கூஃபாவின் ஆளுநரும் யஸீத் மூலம் பதவியிலுள்ள வருமான முஆவியா றளியல்லாஹு அன்ஹு அவர்களின் தந்தை வழிச் சகோதரருமான உபைதில்லாஹ் பின் ஸியாதின் உத்தரவின் பேரில் ஒரு படை புறப்பட்டது.

'கர்பலா' என்ற இடத்தில் தங்கியிருந்த ஹுஸைன் றளியல்லாஹு அன்ஹு மற்றும் அவர்களின் ஆதரவாளர்களுக்கும், இப்னு ஸியாதின் படைக்கும் இடையே சண்டை மூண்டதில் பலபேர் கொல்லப்பட்டனர். ஹுஸைன் றளியல்லாஹு அன்ஹு அவர்களின் தலையை இப்னு ஸியாதிடம் கொண்டு வரப்பட்டபோது அதை ஒரு குச்சியால் குத்தினான். இந்த கொடுங்கோலன் இப்னு ஸியாத் ஹிஜ்ரி 62-ம் ஆண்டு இப்ராஹீம் பின் அஷ்தர் என்பவரால் கொல்லப்பட்டார். தலை தனியாகக் துண்டிக்கப்பட்டது.
(இர்ஷாதுஸ் ஸாரீ, பத்ஹுல்பாரி)

**யஸீத் பின் முஆவியா:-**

1) யஸீத் பின் முஆவியாவின் படைக்கும் மதீனாவாசிகளுக்குமிடையே ஹிஜ்ரி 63-ம் ஆண்டு சண்டை நடந்தது. இதன் பெயரே அல்-ஹர்ரா போராகும். இவை ஏன் வந்தது என்றால் யஸீதின் தலைமையை ஏற்காமல், அவரால் நியமிக்கப்பட்ட மதீனா ஆளுநர் உஸ்மான் பின் முஹம்மத் என்ற அவருடைய உறவினரைப் பொறுப்பிலிருந்து மதீனா மக்கள் அகற்றி விட்டனர். இதனால் கோபமடைந்த யஸீத், மதீனா மீதுபோர் தொடுக்க உத்தரவிட்டார். அவரின் தளபதி முஸ்லிம் பின் உக்பா தலைமையில் மதீன நகர மக்களுடன் நடந்த மோதலில் முஹாஜிர்கள் மற்றும் அன்சாரிகள் 700 பேர் உயிரிழந்தனர். இவர்களின் ஹுதைபிய்யா உடன்படிக்கையில் பங்கு கொண்டவர்களும் அடங்குவர்.

ஆதாரம்:- (உம்தத்துல் காரீ)

2) யஸீத் பின் முஆவியா அவர்கள் இறந்த பிறகு இராக்கில் 'அஸாரிகா' என்ற பெயரில் மாபெரும் குழப்பம் வந்தது. இவை 20 வருடத்திற்கு மேல் நீடித்தது. ஹிஜ்ரி 74-ம் ஆண்டு மக்காவில்

அப்துல்லாஹ் பின் ஸுபைர் றளியல்லாஹு அன்ஹு அவர்களை ஹஜ்ஜாஜ் பின் யூசுஃப் - கொடுங்கோலன் படுகொலை செய்து புனித கஅபாவைத் தகர்த்து குழப்பத்தை உண்டாக்கினான். தாயிஃப் வாசியான ஹஜ்ஜாஜ் பின் யூசுப் ஹிஜ்ரி 95 (கி.பி. 714)-ல் ஹிஜாஸ் மாநிலத்தின் அளுநராக பதவி வகித்தார்.

(இர்ஷாதுஸ் ஸாரீ)

மேற்கண்ட (ஃபித்னா) குழப்பங்களை அடுத்து கண்ணியத்திற்குரிய இமாம்களின் காலங்களிலும் அவை வந்தது. அவற்றை சிறிது பார்ப்போமா?

1) இமாம் அபூஹனீபா றளியல்லாஹு அன்ஹு அவர்களின் காலத்தில் பல்வேறு குழப்பங்கள் வந்தன. பிக்ஹு, மஸாயில் பிரச்சனைகள் பற்றி அவ்வப்போது இமாம் அவர்கள் தெளிவுபடுத்திக் கொண்டேயிருந்தார்கள். அவர்களின் காலத்தில் 'கடவுள் இல்லை' - என்ற நாத்தீகவாதம் தலைத்தோங்கியது. அவற்றை முறிக்கும் விதமாக நாத்தீகவாதிகளுடன் விவாதம் புரிந்து சத்தியத்தை மெய்ப்படுத்தினார்கள் என்பது குறிப்பிட தக்கது.

2) இமாம் ஷாபிஈ றளியல்லாஹு அன்ஹு அவர்கள் காலத்தில் பல்வேறு விதமான கொள்கை குழப்பங்கள் வந்தன. அவற்றில் மிக உச்சகட்டமாக முஃதஸிலாக்களின் அட்டகாசம் நிறைந்து இருந்தது. மேலும் பிக்ஹு, மஸாயில், சம்மந்தமான பிரச்சனைகளுக்கு இமாம் அவர்களின் ஆணித்தரமான விளக்கம் அளிக்கப்பட்டது.

3) இமாம் அஹ்மது இப்னு ஹன்பல் றளியல்லாஹு அன்ஹு அவர்கள் காலத்தில் பல்வேறு குழப்பங்கள் வந்தன. அவற்றில் மிக முக்கியமானது. குர்ஆன் படைக்கப்பட்டது என்ற கொள்கை கூட்டங்கள் நிறைந்து இருந்தனர். இமாம் அவர்கள் அதற்கு எதிராக பிரச்சாரம் செய்து குர்ஆன் இறைவனின் வேதம் அது அல்லாஹ்வின் பேச்சு என்று சத்தியத்தை எடுத்து வைத்தார்கள். இதனால் கொடுங்கோலர்களினால் கசையடி வாங்கினார்கள். சிறையில் அடைத்து சித்ரவதையை அடைந்தார்கள்.

4) இமாம் நவவீ ரஹ்மத்துல்லாஹி அவர்களின் கூற்று:- நல்லோர்களான முன்னோர்களை மதிக்காமல் ஏசிப்பேசும் ஷூராஅத் மற்றும் ராஃபிளிகள் போன்ற நவீனவாதிகளின் ஃபத்வாக்கள் (தீர்ப்புகள்) ஏற்கப்படவேண்டிய அவசியமில்லை. மாறாக அவை மறுக்கப்படவேண்டும். அந்த கொள்கைவாதிகளின் பேச்சுக்கள் அனைத்தும் ஒதுக்கப்பட வேண்டியவையாகும்.

நூல்:- (ரவ்ழத்துல் தாலிபீன், பாகம் - 1)

5) இமாம் குர்துபீ ரஹ்மத்துல்லாஹி அவர்களின் கூற்று:- ஸஹாபாக்களுக்கு எதிரான கருத்துக்களைக் கொண்ட காரிஜிய்யா, ராஃபிளிய்யா, முஃதஸிலா கூட்டத்தினர் செய்த தவறுகளால் மறுமையில் ஹவ்ளுல் கவ்தர் - நீர் அருந்த முடியாமல் அங்கிருந்து விரட்டி அடிக்கப்படுவார்கள்.

நூல்:- (ஷரஹு பிக்ஹுல் அக்பர், பக்கம் - 118)

மேற்கண்ட நிகழ்வுகளை அடுத்து வழிகெட்ட கொள்கை வாதகும்பல்களின் ஃபித்னா (குழப்பம்) மற்றும் அதன் தலைவர்கள் குறித்து சுருக்கமாக காண்போம்!

1) ராஃபிளியாக்கள்:- "ராஃபிளா என்றால் கைவிட்டோர் என்று பொருளாகும். ஷியாக்களில் ஒரு பிரிவினர் ஆவர். மேலும் இவர்கள் ஸைத் பின் அலி றளியல்லாஹு அன்ஹு அவர்களை ஒரு நெருக்கடியான நிலையில் கைவிட்டதன் காரணத்தால் 'ராஃபிளா' என்று அழைக்கப்பட்டனர். இதன் தலைவன் அப்துல்லாஹ் இப்னு ஸபா என்பவன். இக்கூட்டத்தினர்கள் ஸஹாபாக்களை திட்டியும், குறை கூறியும் அவர்கள் செய்யாததை செய்ததாகவும், செய்ததை செய்யாததாகவும் கூறி விஷமம் செய்தனர். மேலும் சுவனத்தை கொண்டு நன்மாராயம் சொல்லப்பட்ட பத்து ஸஹாபாக்களில் அலி றளியல்லாஹு அன்ஹு அவர்களைத் தவிர மற்றவர்களைக் வெறுப்பதும், குறை கூறுவதும் ராஃபிளியாக்களின் முக்கிய கொள்கையாகும்."

"அபூபக்கர் றளியல்லாஹு அன்ஹு, உமர் றளியல்லாஹு அன்ஹு, உஸ்மான் றளியல்லாஹு அன்ஹு அவர்கள் ஆகிய

மூவரும் நபி ஸல்லல்லாஹு அலைஹு வஸல்லம் அவர்கள் கொண்டு வந்த இஸ்லாத்தை அதன் தூயவடிவிலிருந்து மாற்றிவிட்டனர் என்று அபாண்டமாக குற்றம் சாட்டினர். நபியவர்களுக்கு அடுத்து கலீபாவாக ஆவதற்கு தகுதியானவர் அலி றளியல்லாஹு அன்ஹு அவர்கள் தான் என்றும் கூறினர். அடியாருக்கு நன்மை தருவது இறைவனுக்கு வாஜிப் எனவும், நல்லதை இறைவன் படைக்கின்றான், தீயதை மனிதன் தான் படைக்கிறான் எனவும் கூறி பிரச்சாரம் செய்தனர்.”

ஆதாரம் : (துப்ஸீர் இப்னுகஸீர், ஷரஹு பிக்ஹுல் அக்பர், அல்மின்ஹாஜ்)

**2) ஷியாக்கள்:-** “அலி றளியல்லாஹு அன்ஹு அவர்கள் மீது அளவுக்கதிகமாக பாசம் வைத்து அவர்களும் அவர்களின் குடும்பத்தார்கள் மட்டுமே கிலாஃபத்திற்கு தகுதியானவர்கள் என்று கூறினார்கள். மேலும் அவர்கள் சொல்லாத சொல்லையும், செயலையும் சொல்லியதாக கதை கட்டி விட்டனர். மேலும் அலி றளியல்லாஹு அன்ஹு அவர்களின் ஆட்சிக்குப் பிறகு இவர்களின் அட்டகாசம் மிக பரவலாகத் தோன்றியது. ஷியாக்களின் வழிகெட்ட கொள்கையின் மிக உன்னதமானது அபூபக்கர் றளியல்லாஹு அன்ஹு, உமர் றளியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு முன்பே அலி றளியல்லாஹு அன்ஹு அவர்களுக்கு தான் ‘கலீபா’ பதவி கொடுத்து இருக்கவேண்டும் என்பதும் அலி ரளியல்லாஹு அன்ஹு அவர்களின் மீது பல விஷயங்கள் இட்டுக் கட்டி மக்களிடையே பிரசங்கம் செய்வதுமாகும். ஷியாக்களின் பிரிவினரில் இருந்து ஸைதிய்யா, இமாமிய்யா, இஸ்னா அஷரிய்யா, இஸ்மாயீலிய்யா, நஸீரிய்யா, பாபிய்யா, பஹாகிய்யா என பல்வேறு பிரிவினர்கள் தோன்றினார்கள் என்பது குறிப்பிடதக்கது.

ஆதாரம் : (அல்மின்ஹாஜ், உம்தத்துல்காரீ, உஸ்வதுல் ஃகாபா)

**3) கவாரிஜிய்யாக்கள்:- (காரிஜியாக்கள்)** நான்காம் கலீபா அலி றளியல்லாஹு அன்ஹு அவர்களின் ஆட்சிகாலத்தில் இஸ்லாமிய அரசுக்கு எதிராக பயங்கரவாதச் செயல்களில் ஈடுபட்ட வன்முறையாளர்களைக் குறிக்கும். இராக்கில் கூஃபா நகருக்கு அருகில், ‘ஹரூரா’ என்ற இடத்தில்தான் இவர்களின் முதலாவது

கூட்டம் நடந்தது. மேலும் இவர்கள் 'ஹரூரிய்யாக்கள்' எனவும் அழைக்கப்படுன்றார்கள். பஃதாத் அருகில் 'நஹ்ரவான்' என்னுமிடத்தில் ஹிஜ்ரி - 37 (கி.பி. 658-ம் ஆண்டு) கலீபா அலி றளியல்லாஹு அன்ஹு அவர்களால் இவர்கள் போரின் மூலம் தோற்கடிக்கப்பட்டார்கள். மேலும் இவர்களின் குழப்பம் தொடர்ந்து கொண்டேயிருந்தது. இவர்களில் ஒருவனான அப்துர் ரஹ்மான் பின்முல்ஜம் என்ற காரிஜியினால் செய்யிதினா அலி றளியல்லாஹு அன்ஹு அவர்கள் கொல்லப்பட்டார்கள். மேலும் காரிஜியாக்களின் விஷக் கருத்துக்கள் என்னவெனில் சுவனம் குறித்து நற்செய்தி கூறப்பட 10 ஸஹாபிகளை காபிர்கள் (நவூதுபில்லாஹி...) என கூறினர். மேலும் முஸ்லிம்களைக் கொல்வதும் அவர்களின் செல்வங்களை கொள்ளையடிப்பதும் ஹலால் என்றும் பெரும்பாவிகளை காபிர் எனவும் இஜ்மா, கியாஸ் போன்றவற்றை மறுத்தும் திரிந்தனர்.

ஆதாரம்:- (அல்மின்ஹாஜ், பத்ஹுல் பாரி, அல்முன்ஜித்)

**4) முஃதஸிலாக்கள்:-** "இஸ்லாத்தில் மாறுபட்ட சிந்தனைகளை வெளியிட்ட ஒரு பிரிவினர். 'வாஸில் பின் அதாஉ' என்பவன் தான் இந்த கூட்டத்தின் தலைவனாவான். இமாம் ஹஸன் அல்பஸரீ (ரஹ்) அவர்களின் மாணவராகயிருந்தார். பின்னர் அவர் மாறுபட்ட கருத்துக்களைச் சொல்லி அன்னாரின் சபையிலிருந்து விலகிச் சென்றார். இதையொட்டியே அவர் விலகிச் சென்றவர் முஅதஸிலீ என்று அழைக்கப்பட்டார். அவரது ஆதரவாளர்களை முஅதஸிலாக்கள் என்று அழைக்கப்பட்டனர். இவர்களின் வழிகெட்ட கொள்கையில் முக்கியமானதை பார்ப்போம். முஸ்லிம்கள் பாவம் செய்வோர் இஸ்லாத்திலிருந்து வெளியேறிவிடுவர் என்பதாகும்."

(ஆதாரம் : அல்மின்ஹாஜ்)

**5) தஃப்ழ்லியாக்கள்:-** "இந்த கூட்டத்தை சார்ந்தவர்கள் தங்களை அலி றளியல்லாஹு அன்ஹு அவர்களின் நேசர்கள் எனக் கூறி கொள்வார்கள். மேலும் அபூபக்கர் றளியல்லாஹு அன்ஹு, உமர் றளியல்லாஹு அன்ஹு ஆகியோரை விட அலி

றளியல்லாஹு அன்ஹு அவர்களே சிறந்தவர்கள் என வாதிடுவார்கள். இந்த விஷயத்தை தவிர்த்து மற்ற அனைத்தையும் சுன்னத் ஜமாஅத் கொள்கையினர் கொண்டுள்ளபடி நம்புபவர்கள் இவர்களையே 'பித்அத் காரர்கள்' என்று அழைக்கப்படுகின்றனர்."

6] **ஜப்ரிய்யா, ஜஹ்மிய்யா:-** "இக்கூட்டத்தினர் ஹிஜ்ரி 125-ல் உலா வந்தனர். இவர்களின் வழிகெட்ட கொள்கை மனிதனுக்கு என்று தனியாற்றல், விருப்ப உரிமை எதுவுமில்லை. எல்லாம் இறைவன்விட்ட வழியே எனும் ஊழ்வழிக் கோட்பாட்டினை கொண்டவர்கள். இறைமறுப்பாளன் செய்யும் நன்மைகள் ஏற்கப்படாது என்பது போல் இறை நம்பிக்கை கொண்டவன் செய்யும் பாவங்களால் அவனுக்கு எந்தப் பாதிப்பும் ஏற்படாது என்பது இவர்களின் கொள்கைகளில் ஒன்றாகும்."

7] **முர்ஜிஆ:-** "தள்ளிவைப்பவர்கள், இடைவெளி ஏற்படுத்துபவர்கள் என்பது இதன் பொருளாகும். விதி குறித்து தேவையற்ற விவாதத்தில ஈடுபட்டதோடு, இறைவனுடைய விஷயத்தில் அளவுக்கதிகமான நம்பிக்கையை வெளியிட்ட ஆரம்ப கால பிரிவினர்கள் ஆவர். ஜப்ரிய்யா, ஜஹ்மிய்யா போன்ற பிரிவினர்களின் கிளைப் பிரிவினரே இவர்கள் முர்ஜிஆ. இறைமறுப்பாளன் செய்யும் நன்மைகள் ஏற்கப்படாது என்பது போல், இறை நம்பிக்கையாளன் செய்யும் பாவங்களால் அவனுக்கு எந்தப் பாதிப்பும் நேராது என்பது இவர்களின் வாதமாகும். நம்பிக்கையாளர்களைக் நற்செயல்களிலிருந்து தள்ளி வைப்பதுடன் இறைக் கட்டளைக்கும், இறை நம்பிக்கையாளர்களுக்கும் இடையே மிகுந்த இடைவெளியை உருவாக்கியதே இவர்களுக்கு இப்பெயர் வரக்காரணமாகும்."

**கத்ரீயாக்கள்:-**

எல்லா விஷயங்களும் இறைவனின் நாட்டப்படி நடப்பதில்லை. மனிதனின் விருப்பப்படியே நடக்கின்றது என்பது இவர்களின் கொள்கையாகும். நன்மையான விஷயங்கள் நடந்தால் அவற்றை ஏற்பதும், தீமையான விஷயம் நடந்தால் அவை ஷைத்தானால் ஏற்படுகின்றது என சொல்வதும் இவர்களின் வாதமாகும். குறிப்பாக

'களாகத்ரை' மறுப்பது இவர்களின் கொள்கை. இத்தகைய கொள்கைவாதிகள் ஸஹாபாக்களின் இறுதி காலகட்டத்தில் ஆரம்பமானது. இந்த கொள்கையை முதன் முதலில் பரப்பியவன் மஃபதுல் அல்ஜுஹனீ என்பவனாவான். இவன் ஈராக்கின் 'பஸரா' ஊரைச் சார்ந்தவன்.

களாகத்ரு விஷயத்தை மறுக்கும் கூட்டத்தாரைக் குறித்து ஹதீஸ் ஷரீஃபில் வந்துள்ளதாவது:-

1. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சொன்னார்கள் : "என்னுடைய உம்மத்துகளில் இரண்டு சாரார்கள் முர்ஜிஆ, கத்ரிய்யா இவர்களுக்கு இஸ்லாத்தில் எந்த வித பாக்கியமும் கிடையாது."

அறிவிப்பு : இப்னுஅப்பாஸ் றளியல்லாஹு அன்ஹு நூல் : திர்மிதீ (2149), இப்னுமாஜா (62)

2. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சொன்னார்கள் : "என்னுடைய உம்மத்தில் உருவமாற்றம், பூகம்பம் ஏற்படும். அது களாகத்ரை பொய்ப்படுத்துவோருக்கு."

அறிவிப்பு : இப்னு உமர் றளியல்லாஹு அன்ஹு நூல் : திர்மிதீ, அபூதாவூது

3. இப்னு உமர் றளியல்லாஹு அன்ஹு அவர்கள் சொன்னார்கள் : "கத்ரியாக்கள் என்பவர்கள் இந்த உம்மத்தின் மஜூஸிகள் (நெருப்பு வணங்கிகள்), அவர்கள் நோயுற்றால் நலம் விசாரிக்க வேண்டாம். மௌத்தாகி விட்டால் அவரின் ஜனாஸாவுக்கு போக வேண்டாம்"

நூல் : அஹ்மது, அபூதாவூது

**முஜஸ்ஸிமாக்கள்:-**

இறைவனுக்கு உருவம் உண்டு. என்பதில் இவர்களின் மூலதனமான கொள்கையாகும். மனிதனுக்கு எவ்வாறு உறுப்புகள் உள்ளதோ கை, கால், கண், காது, மூக்கு அவை போன்று இறைவனுக்கும் உண்டு என்பது இவர்களின் அசைக்க முடியாத

கொள்கையாகும். குர்ஆனில் வந்துள்ள வசனங்களையும், ஹதீஸில் வந்துள்ள வாக்கியங்களையும் (இறைவன் சம்மந்தமாக) கை என்றால் கை தான் என்றும், கால் என்றால் கால்தான் என்றும் மொழி பெயர்ப்பார்கள் என்பது குறிப்பிடதக்கது. இவர்களின் கொள்கைகளை அன்றைய காலத்தில் வாழ்ந்த மார்க்க அறிஞர்கள் பிரச்சாரம், ஃபத்வாக்கள் மூலம் முறியடித்தார்கள் என்பதும் குறிப்பிடதக்கது. மேலும் இதன் பிரதான தலைவர் முஹம்மது இப்னு கர்ராம் என்பவன் ஆவான். இவன் கர்ராமிய்யாக்களின் கொள்கையால் ஈர்க்கப்பட்டான். மேலும் கர்ராமிய்யாக்களிலிருந்து 'இறைவனுக்கு உருவமுண்டு' என்று கொள்கையுடன் கூட்டம் உருவானது. இவர்களை மக்கள் 'முஜ்ஜஸ்ஸிமா' என பெயர் சூட்டி அழைத்தனர்.

**இப்னுதைமிய்யா :-**

சிரியா நாட்டில் ஹிஜ்ரி-661-ல் பிறந்தார். இவரது பிரச்சாரமும், நூல்களும் உண்மையான சுன்னத்வல் ஜமாஅத் கொள்கைகளுக்கு முற்றிலும் முரண்பாடாகயிருந்தது. அவ்வப்போது சமுதாயத்தில் பல பிரச்சனைகளை ஏற்படுத்தி மக்களை குழப்பத்தில் ஆழ்த்துவார். இவர் எழுதிய நூல்கள் பல அவற்றில் பிரபலமான நூல்கள் ஃபதாவா இப்னுதைமிய்யா, இக்திலாஉஸ் சிராத்துல் முஸ்த்தக்கீம் போன்றவையாகும். இவரது கொள்கை குழப்பங்களினால் அவ்வப்போது சிறைத்தண்டனை அடைந்து மீண்டும் வெளியே வருவார். மக்கள் அதிகமாக பின்பற்றப்படுகின்ற ஹன்பலி மத்ஹப்பை சார்ந்த உலமாக்கள் இவரை பின்பற்ற கூடாது என்று பிரச்சாரம் செய்தனர். மேலும் 'இப்னுதைமிய்யாவை குறித்து இவர் தானும் வழிகெட்டு பிறரையும் வழிகெடுக்கச் செய்பவர்'-என்று ஃபத்வாவை வெளியிட்டனர்.

(ஆதாரம் - தப்ஸீர் சாவி)

அல்லாமா இப்னு ஹஜர் அஸ்கலானீ றளியல்லாஹு அன்ஹு அவர்கள் இப்னுதைமிய்யாவை குறித்து சொல்லும் போது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை ஜியாரத் செய்வதற்காக பயணம் செய்வது கூடாது என்று முதன் முதலாக

சொன்னவர் இவரே என்றும் மேலும் அவரின் மோசமான கொள்கைகளில் இவையும் ஒன்றாகும்.

(ஆதாரம் : பத்ஹுல் பாரி)

உலகை சுற்றி வந்த வரலாற்றாசிரியர் இப்னு பதூதா ரஹ்மத்துல்லாஹி அவர்கள் தங்களது பயண அனுபவத்தில் கண்ட காட்சியை குறித்து கூறும் போது :-

உலகை சுற்றி பயணம் செய்து வரும் போது ஒரு தடவை நான் டமாஸ்கஸில் உள்ள பள்ளியில் ஜும்ஆ தொழுகையில் கலந்துகொண்டேன். அதில் பிரசங்கம் செய்தார் இப்னுதைமிய்யா. அவர் குர்ஆன் வசனமான அர்ரஹ்மான் அலல் அர்ஷிஸ்த்தவா - என்ற ஆயத்துக்கு விளக்கம் கூறும் போது இறைவன் அர்ஷில் அமர்ந்தான் எப்படி தெரியுமா? இப்படித்தான் என்று மிம்பர் படியில் உட்கார்ந்து காட்டி இறைவனுடைய ஷிபத்துகளை கேலி செய்தான். இதைகண்ட சுன்னத் ஜமாஅத் ஆலிம் ஒருவர் அவரை எதிர்த்து கேள்வி எழுப்பி பிரச்சனை ஏற்பட்டது. பின்பு அவருக்கு சிறைத் தண்டனையும் கொடுக்கப்பட்டது. இவற்றை நான் நேரிலேயே பார்த்தேன்.

இவ்வாறு பலவிதமான கொள்கை குழப்பங்களை செய்து தனக்கென்று தனி முத்திரை பதித்த இப்னு தைமிய்யா டமாஸ்கஸ் நகர சிறைச்சாலையில் ஹிஜ்ரி 728-ல் இறந்தார் என்பது குறிப்பிடத்தக்கது. இவரது கொள்கையினை பின்பற்றுகின்ற கூட்டத்தார்களை 'வஹ்ஹாபிகள்' என்று அழைக்கப்படுகின்றனர்.

**அப்துல் வஹ்ஹாப் நஜ்தீ :-**

"நஜ்த் நாட்டில் ஹிஜ்ரி 1111-ல் பிறந்தார். இவரது முழுப்பெயர் முஹம்மது இப்னு அப்துல் வஹ்ஹாப் - என்பதாகும். இவர் எழுதிய நூல்கள் ஏராளம். அதில் பிரபலமான நூல் கிதாபுத் தவ்ஹீது- என்பதாகும். இதில் சுன்னத்வல் ஜமாஅத் கொள்கைகளுக்கு மாற்றமாக பல்வேறு சட்டங்களை எழுதியுள்ளார். அவற்றில் குறிப்பாக வஸீலா தேடுவது கூடாது, பாங்குக்கு முன் ஸலவாத் சொல்வது கூடாது, ஜியாரத் செய்வதற்காக மதீனாவுக்குச் செல்வது

ஷிர்க், மீலாது ஷிர்க் மேலும் நபிமார்கள், ஸஹாபாக்கள், சாலிஹீன்கள், நபியவர்களின் மனைவி மார்களின் கப்ருகள், நபியவர்களின் குடும்பத்தினர்களின் கப்ருகள் இவற்றையெல்லாம் இடித்து தரைமட்டமாக்குதை ஜாயிஸ் என்றும் எழுதியும் பிரச்சாரமும் செய்து அதன் பிறகாரம் நடைமுறையும் படுத்தினான். இந்த அப்துல் வஹ்ஹாப் நஜ்தீ. ஹிஜ்ரி 1203 துருக்கியின் சுல்தான் 2வது அப்துல் மஜீதுகானின் மறைவுக்குப் பின்னர் கொந்தளிப்பு ஏற்பட்டது. இதை பயன்படுத்தி இப்னுதைமிய்யாவின் கொள்கைகளை பிரச்சாரம் செய்து தனக்கென்று தலைமைத்துவத்தை ஏற்படுத்தினான். இவனது அட்டகாசம் எந்தளவுக்கென்றால், ஸலவாத் ஓதியவர்களையெல்லாம் கொன்று குவித்தான். மக்கா, மதீனா, ஜித்தா, தாயிப் போன்ற புண்ணியமான நகரங்களையெல்லாம் கர்பலா நகரங்களாக்கினான். ஹதீஸ், பிக்ஹ் நூல்களையெல்லாம் எரித்து சாம்பலாக்கினான். தனது கொள்கையையும், கருத்துக்களையும் ஏற்காத மக்களை காபிர் என்று ஃபத்வா கொடுத்தான், கொன்றும் குவித்தான்.”

“அப்துல்வஹ்ஹாப் நஜ்தீ ஹிஜ்ரி 1206-ல் இறந்தான். இவன் தனது கையில் எப்போதும் கைத்தடி ஒன்றை வைத்து கொண்டிருப்பான். ஒரு முறை அவன் இவ்வாறு சொன்னான். இந்த கைத்தடி எனக்கு உதவுவது கூட நபியவர்கள் எனக்கு உதவுவது கிடையாது என்று பூமான் நபியை ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை தரம் தாழ்த்தி பேசினான். (நவூதுபில்லாஹி மின்ஹா) ஒருமுறை தனது சுய தேவையை நிறைவேற்ற கழிப்பறைக்குச் செல்லும் போது கால் இடறி தடுமாறி கையில் வைத்திருந்த கைத்தடி அவனது மலத்துவாரத்தில் குத்தி வாய் வழியாக வெளியே வந்தது. அவனது இறப்பு மிக கீழ்த்தரமாகயிருந்தது.”.

ஆதாரம் : மாப்பிள்ளை லெப்பை ஆலிம் றளியல்லாஹு அன்ஹு அவர்களின் மங்கானீ-என்ற நூலின் ஸலவாத்தின் சிறப்புகள்-பகுதி

இவனின் நச்சுக் கருத்துக்களை பின்பற்றும் மக்களுக்கு ‘வஹ்ஹாபிகள்’ என பெயரிட்டு அழைக்கப்படுகின்றார்கள் என்பது குறிப்பிடதக்கது.

**காதியானி :-**

"பாகிஸ்தானிலுள்ள பஞ்சாபில் 'காதியான்' என்ற இடத்தில் கி.பி. 1839-ல் பிறந்தான். இவனது பெயர் மிர்ஸாகுலாம் அஹ்மது காதியான். தன்னை நபி 1901-ல் என வாதிட்டு தனது பெயரில் ஒரு இயக்கத்தை ஏற்படுத்தினான். அதன் பெயர் அஹ்மதியா என்பதாகும். தனக்கு இறைச் செய்தி வருவதாகவும் கூறினான். நபித்துவ நுபுவ்வத் என்னுடன் தான் நிறைவு பெறுகின்றது எனவும் தன்னை இறைத்தூதர் என மக்கள் நீங்கள் ஏற்றுக் கொள்ளுங்கள் எனவும் பிரச்சாரம் செய்தான். மேலும் ஆங்கிலம், உருது, பிரெஞ்ச் மற்றும் அந்நிய மொழிகளை தனது நுனிநாக்கில் வைத்திருந்தான். மக்களிடையே இதன் மூலம் (மொழிகள்) தனது விஷமச் பிரச்சாரத்தை செய்தான். கி.பி. 1908-ல் இவ்வுலகை விட்டு பிரிந்தான். இவனையும், இவனது கொள்கையினை பின்பற்றுகின்ற கூட்டத்தார்களும் முர்தத் - காபிர் என அழைக்கப்பட்டனர்.'

**ஜமாஅத்தே இஸ்லாமி :-**

அபுல் அஃலா மௌதூதி என்பவர் ஹைதராபாத்தில் செப்டம்பர் 25, 1903-ல் பிறந்தான். முதன்முதலாக பாகிஸ்தானில் 'ஜமாஅத்தே இஸ்லாமி' என்ற அமைப்பை ஆகஸ்டு 26 1941-ல் உருவாக்கினார். ஹனபி மத்ஹப்பை ஏற்பதாக பிரச்சாரம் செய்வார். ஆனால் மத்ஹபை முழுமையாக பின்பற்றாமல் தன் மனம் போன போக்கில் தான் சட்டங்கள் சொல்வார். அதன்படியே நடப்பார் மேலும் தேவ்பந்தீய உலமாக்களின் கூட்டமைப்பில் தனது அமைப்பை நடத்தினார். இவர் பல்வேறு நூல்களை எழுதியுள்ளார். அவற்றில் சில விஷக் கருத்துக்கள் ஏராளமாக உள்ளன. அவற்றை சிறிது பார்ப்போம்:

1. மலக்குமார்கள் என்பவர்கள் இந்தியாவிலுள்ள விக்கிரஹங்களுக்கு சமமானவர்கள்.

2. தேவ்பந்தீய உலமாக்களையும், வஹ்ஹாபிய்ய

சித்தாந்தத்தின் நாயகர்களான அப்துல் வஹ்ஹாப் நஜ்தீ, இப்னுதைமிய்யா போன்றவர்களின் கொள்கைகளை முழு வீச்சில் பரவச் செய்தார். (உ-ம்) மீலாது கூடாது, மவ்லித் கூடாது, உரூஸ் கூடா.து, வஸீலா கூடாது,..... (இவ்வாறு பல விஷயங்களை செய்வது கூடாது என்று எழுதியுள்ளார்.)

3. தீன் என்பது - தொழுகை, நோன்பு, ஹஜ், ஜக்காத் போன்றவைகளல்ல. மாறாக இஸ்லாமிய ஆட்சியை நிலை நாட்டுவேததீன் என்பதாகும். அவை தான் தீன் என்பதின் நோக்கமாகும்.

ஆதாரம் : தஃப்ஹீமாத் (பாகம் - 1. பக்கம் - 86, 87)

4. ஸஹாபியத் தோழர்களை குறித்து தவறான சித்தாந்தத்தை உண்டு பண்ணி அவர்களின் புகழை தாழ்த்தி பின்பற்றக் கூடாது என்பதில் உறுதிபட செயல்பட்டார்.

5. தஃப்ஹீமுல் குர்ஆன் என்னும் குர்ஆனுக்கு விரிவுரை எழுதி அதை மக்களிடையே பரப்பினார். அதில் சுன்னத் வல் ஜமாஅத் உலமாக்களின் விளக்கவுரைக்கு மாற்றமான விரிவுரை எழுதப்பட்டு இருந்தது.

6. மதீனாவிற்கு ஹிஜ்ரத் செய்த முஹாஜிர் ஸஹாபாக்களுக்கு மதீனாவிலுள்ள அன்ஸார் ஸஹாபாக்கள் தங்களின் மனைவிமார்களை தலாக் சொல்லி விட்டுக் கொடுத்ததை - அது யஹூதிகளின் பழக்கம் என்று குறை கூறியுள்ளார்.

ஆதாரம் : தஃப்ஹீமாத், பாகம் - 2, (பக்கம் - 47)

7. கிலாபதோ முலூகிய்யத் என்ற தன்னுடைய நூலில் பக்கம் - 283-ல் நபியவர்கள் ஸஹாபாக்களை உயர்தரமான முறையில் தர்பியத் செய்திருந்தாலும் அவர்களிடம் ஏற்கனவே இருந்த குறை நீங்காத ஸஹாபாக்களும் இருக்கத்தான் செய்தனர் என்று எழுதியுள்ளார்.

8. கிலாபதோ முலூகிய்யத் என்ற நூலில் பக்கம் 107-ல் உஸ்மான் றளியல்லாஹு அன்ஹு அவர்கள் தவறு செய்து விட்டதாக கூறியுள்ளார். பக்கம் 162-ல் முஆவியா றளியல்லாஹு அன்ஹு அவர்கள் கனிமத் பொருளை பங்குவைக்கும் விஷயத்தில் குர்ஆன், ஹதீஸுக்கு பகிரங்கமாக மாறு செய்துள்ளார் என்று எழுதியுள்ளார்.

9. உஹது யுத்தத்தில் தோல்வி ஏற்பட்டதற்கு காரணம் என்னவெனில், ஸஹாபாக்கள் ஏற்கனவே வட்டி வாங்கி சாப்பிட்டதின் மூலம் ஏற்பட்ட பேராசையும், பொறாமையுமேயாகும்.

ஆதாரம் : தஃப்ஹீமுல் குர்ஆன்

10. சினிமா ஷரீஅத்திற்கு முரணில்லாமல் இருந்தால் அதை பார்க்கலாம். அவை கூடும் மேலும் சினிமாவில் நடிக்க ஆசையிருந்தால் அதை கற்றுக் கொள்ளலாம்.

ஆதாரம் : ரஸாயிலோ மஸாயில் (பாகம் - 2, பக்கம் - 273)
ரத்தே மௌதூதியத் (பாகம் - 5, பக்கம் - 35)

11. மௌதூதி மத்ஹப்பை பின்பற்ற அவசியமில்லை என்று 'மஸ்அலயெதக்லீத் அவ்ர் ஜமாஅத்தே இஸ்லாமி' என்ற நூலில் பக்கம் 11-ல் கூறியுள்ளார். மேலும் ரஸாயிலோ மஸாயில் என்னும் நூலில் பக்கம் 235, பாகம் - 1ல் கூறியுள்ளார்.

மேற்கண்ட விஷயங்கள் மிக சொற்பமானவையே! விரிவஞ்சி சுருக்கித் தந்து உள்ளேன். இந்தளவு குழப்பத்தை செய்த மௌதூதி செப்டம்பர் - 22 - 1979ல் நியூயார்க் நகரில் இறந்தார் என்பது குறிப்பிடதக்கது.

மேற்கண்ட இவரின் நூல்களையும், கொள்கைகளையும் போற்றிப் புகழ்ந்து இவருக்கென்று தனிக் கூட்டமேயுள்ளது. இத்தகைய்யோரையே 'ஜமாஅத்தே இஸ்லாமியர்கள்' என்று அழைக்கப்படுகின்றார்கள்.

## ரஷாத் கலீபா (19 எண் பிரிவினர்) :-

"ரஷாத் கலீபா மிஸ்ரில் நவம்பர் 19, 1935-ல் பிறந்தான். அமெரிக்காவில் தனக்கு தலைமையிடத்தை உருவாக்கினான். குர்ஆனில் 19 எண் உள்ளது. இதில் ஒரு வகையான தாத்பரியம் (MIERACILE) உள்ளது என்று பிரச்சாரம் செய்தான். மக்கள் இவனது பேச்சில் மயங்கி அவனது வலையில் வீழ்ந்தனர். மேலும் இவனது 19 கண்டு பிடிப்பை குறித்து பாராட்டும் விதமாக சவூதிஅரசு பதக்கம் வழங்கி கௌரவித்தது."

"ஹதீஸ்கள் அனைத்தும் ஷைத்தானின் சொல் என்று பிரச்சாரம் செய்தான். மேலும் புகாரி இமாம் அவர்களை தரக்குறைவாக விமர்சனம் செய்தான். மேலும் இமாம்கள் அனைவரையும் இந்த சண்டாளன் கடுமையாக கார்ட்டூன் போட்டு எழுதினான். கேவலப்படுத்தி பிரச்சாரம் செய்தான். 1989-ல் குர்ஆன் வெளியீட்டு அதில் உள்ள சூரா தவ்பாவின், கடைசி ஆயத்து 128, 129 போன்ற இறைவசனங்களை எடுத்துவிட்டு வெளியீடு செய்தான்."

"தன்னைத்தானே ரசூல் என்று தாஃவா செய்தான், இதற்காக யாஸீன் சூராவிலுள்ள இன்னக்க மினல் முர்ஸலீன் - என்ற ஆயத்தை ஆதாரமாக காட்டி இது எனக்காக தான் அருளப்பட்டது என்றான். 19-7-2009 அன்று மீண்டும் அவனுடைய தர்ஜமாவை சென்னையில் வெளியிட முயற்ச்சித்த போது உலமாக்களின் ஒட்டு மொத்த நடவடிக்கையினால் அவை முறியடிக்கப்பட்டது. மேலும் இவர்களின் கூடாரங்கள் சென்னையில் மண்ணடியிலும், ஜெமினி பிரிட்ஜிலும் ஆபீஸ் வைத்து இயங்கி கொண்டிருக்கின்றது என்பது குறிப்பிடதக்கது."

ரஷாத் கலீபாவின் நச்சு விஷக்கருத்துக்களின் சிலவற்றை இதோ பார்ப்போம்:-

1. பாங்கில் அஷ்ஹது அன்ன முஹம்மதுர் ரசூலல்லாஹ்- என்ற வாக்கியத்தை சொல்வது கூடாது. (நவூதுபில்லாஹ்)

2. லாயிலாஹா இல்லல்லாஹ் மட்டும் தான் கலிமா முஹம்மதுர் ரசூலல்லாஹ் என்பதை சொல்வது கூடாது (நவூதுபில்லாஹ்)

3. ஜக்காத் கொடுப்பதின் முறை என்னவெனில் ஒருவன் சம்பாத்தியம் செய்துவிட்டு வந்தவுடனேயே 2½% ஜக்காத் அதிலிருந்து கொடுத்து விட வேண்டும்.

4. அத்தஹய்யாத்தில் அஷ்ஹது அல்லாயிலாஹா மட்டும் தான் சொல்ல வேண்டும் அஷ்ஹது அன்னமுஹம்மதுர் ரசூலல்லாஹ் - என்று சொல்வது கூடாது. (நவூது பில்லாஹ்).

இவை போன்று ஏராளம், ஏராளம் இந்த கயவன் ரஷாத் கலீபா தானும் வழி தவறி பாமரமக்களையும் வழிகெடுத்து நரகத்திற்கு இழுத்து செல்லும் இந்த கொடிய கொடுங்கோலன் 1990-ல் அமெரிக்காவில் உள்ள Tucsol டக்ஸல் என்னும் இடத்தில் ஜனவரி 31-ல் சுடப்பட்டு இறந்தான். இவனது கொள்கையினை உயிர் மூச்சாக ஏற்று தமிழ்நாட்டில் சில புல்லுருவிகள் உலா வருகின்றனர் அவர்களில் புதிய நினைவூட்டல் என்றும் குர்ஆன் மட்டும் போதும் என்றும், இறைவனுக்கு அடிபணிவோர் சங்கம் என்றும், வருகின்றனர். இவர்களை பின்பற்றும் மக்களையே ரஷாத் கலீபாவின் 19 எண் உடையவர்கள் என்று அழைக்கப்படுகின்றனர்.

**தப்லீக் ஜமாஅத் :-**

"பதிமூன்றாவது நூற்றாண்டில் டில்லி மாநகரில் புகழ்வாய்ந்த குடும்பத்தைச் சார்ந்த அஸீஸிய்யா குடும்பத்தில் ஷாஅப்துல் அஜீஸ் முஹத்திது தெஹ்லவீ ரஹ்மத்துல்லாஹி அவர்களின் குடும்பத்தில் இஸ்மாயில் தெஹ்லவீ - என்றொருவன் தோன்றினான். இயற்கையிலேயே இல்மு - வின் அதிக தேட்டம், ஆர்வம் இருந்தது. எல்லாவற்றையும் கற்றுக் கொண்டு ஹஜ்ஜுக்கு போக நாடி ஹிஜாஸ் நகரம் சென்றார். மேலும் இஸ்மாயில் தெஹ்லவீக்கு வஹ்ஹாபிய கோட்பாட்டை போதிக்கும் 'கிதாபுத் தவ்ஹீத்' என்ற நூல் அரபுநாட்டில் வைத்து கிடைத்தது. அதை அப்படியே மொழி பெயர்த்து தக்வீயத்துல் ஈமான் என்ற பெயரில் தமிழகமெங்கும் உலாவச் செய்தார். இது உருது மற்றும் தமிழில் வெளிவந்தது."

தக்வியத்துல் ஈமான் என்ற நூலிலுள்ள நச்சுக்கருத்துகளில் சில:-

1. எவன் யாரசூலல்லாஹ், யா முஹிய்யத்தீன், யாகாஜா என்று சொல்வானோ அவன் காபிர் (பக்கம் - 66, 67)

2. நபியவர்களின் ரவ்ளா ஷரீஃபை ஜியாரத் செய்வதற்காகவே மட்டும் போவது ஷிர்க் (பக்கம் - 10, 40)

3. நபியவர்கள் மரணித்து மண்ணோடு மண்ணாகி விட்டார்கள். (பக்கம் - 38)

4. நபியவர்கள் ஷஃபாஅத்துச் செய்வார்கள் என்று யாராவது நம்பினால் அவன் அசல் முஷ்ரிக்காகவும், மடையனாகவும் ஆவான். (பக்கம் - 25)

5. நாயகமவர்கள் ஒரு அற்ப அணுவை விடவும் குறைந்தவர்கள். (பக்கம் - 45)

6. மூத்த சகோதரனுக்கு கொடுக்கும் மரியாதை அளவு தான் நபியவர்களுக்கு கொடுக்க வேண்டும். (பக்கம் - 50)

7. அல்லாஹ் பொய் சொல்ல முடியும் - அல்லாஹ் பொய் சொல்லுவது சாத்தியமாகும். (பக்கம் - 31)

இஸ்மாயில் தெஹ்லவீயின் கொள்கையினை அடிபிறழாமல் பின்பற்றி பிரச்சாரம் செய்தார். காசிம் நானூத்வீ என்பவராவார். இவர் தேவ்பந்தில் உள்ள தாருல் உலூம் காசிமிய்யா - என்ற பாடசாலையை 1870-ல் உண்டாக்கினார். மேலும் அவர் தனது தஹ்தீருன்னாஸ் என்ற நூலில் பக்கம் 2,3-ல் எழுதியதாவது :- சாமானிய ஜனங்களின் அபிப்பிராயத்தில் நபியவர்கள் 'காத்த முன்னபிய்யீன்' என்பதற்கு பொருள். அவர்கள் இறுதி நபியாகயிருக்கும். அவர்களுக்குப் பின்பு வேறு நபியில்லை என்பதாகும். ஆனால் காலத்தில் முந்துவதிலோ, பிந்துவதிலோ தனி விசேஷமில்லை என்பது புத்திமான்களுக்கு விளங்கும். மேலும் நபியவர்களுக்குப் பின் வேறொரு நபி உண்டாவார்கள். என்று

வைத்துக் கொண்டாலும் 'காத்தமுன் னபிய்யீன்' என்பதில் யாதொரு வித்தியாசமுமில்லை.

தஹ்தீருன்னாஸ் - பக்கம் 12, 13

நபியவர்களுக்கு பின் நபி வருவார் என்று தனது நூலில் எழுதி மக்களை வழிகெடுத்து நாசமாக்கினான் இந்த காசிம் நானூத்வீ. இவரைத் தொடர்ந்து தேவ்பந்தீய பாடசாலையின் இரண்டாம் தலைவர், தப்லீக் ஜமாஅத்தின் தலைவர் இல்யாஸ் காந் தலவீயின் முதல் குருவாகியவரும், இல்யாஸிடம் 10 வருடம் கல்வி கற்றவரான ரஷீத் அஹ்மது கங்கோஹி தனது ஃபதாவா ரஷீதிய்யா என்ற நூலில் எழுதியிருப்பதில் சில :-

1. அப்துல் வஹ்ஹாப் நஜ்தீ நல்லவர். அவரது கொள்கைகள் மிக உயர்ந்தவை. அவரது மத்ஹப் ஹன்பலியாகும். அவரது குணத்தில் சற்று கடுமையிருந்தது. அவரை பின்பற்றுவோர் மிகவும் நல்லவர்கள்.

நூல்:- ஃபதாவா ரஷீதிய்யா (பாகம் - 3, பக்கம் 79)

2. தக்வியத்துல் ஈமான் - என்ற நூல் மிக உன்னதமான நூலாகும். ஷிர்க், பித்அத் எதிர்ப்பதில் அதற்கு நிகரானது எதுவுமில்லை. இவற்றில் உள்ளவை அனைத்தும் குர்ஆன், ஹதீஸ் இரண்டில் உள்ளவை தான். இவற்றை படிப்பதும், அய்ன் - இஸ்லாமாகும்.

நூல்:- ஃபதாவா ரஷீதிய்யா (பாகம் - 1, பக்கம் - 115)

ஃபதாவா ரஷீதிய்யாவில் மீலாது நபி கூடாது, (துஃப்ரூக்) ஷீரணி நேர்ச்சைகளை சாப்பிடுவது ஹராம் என்றும் காகத்தை சாப்பிடுவது கூடும் போன்ற தவறான ஃபத்வாக்களை எழுதியுள்ளார் என்பது குறிப்பிடதக்கது.

தேவ்பந்திய கலாசாலையின் மூன்றாவது இமாமும், தப்லீக் ஜமாஅத்தின் ஸ்தாபகரான இல்யாஸ் காந்தலவி இரண்டாவது குருவான கலீல் அஹ்மது அம்பேட்டி தனது 'பராஹீனே காத்திஆ' என்ற நூலில் எழுதிய விஷகருத்திலிருந்து.

1. ஷைத்தானுக்கும், மலக்குல் மவ்த்தான இஸ்ராயீல் (அலைஹி வஸல்லம் அவர்களுக்கும் எல்லா மனிதர்களின் நிலையையும் அறியக்கூடிய கல்வியிருக்கின்றது என்று கூறுவது சரியானது. ஏனெனில் ஷைத்தானுக்கும், இஸ்ராயீல் அலைஹி வஸல்லம் அவர்களுக்கும் எல்லா மனிதர்களின் நிலையையும் அறியும் கல்வி இருப்பது குர்ஆனில் தெளிவாக சொல்லப்பட்டிருக்கின்றது.

ஆனால் நபிகளாருக்கு அந்தளவிற்கு அறிவு உள்ளதற்கு குர்ஆனில் என்ன ஆதாரமிருக்கின்றது? (பராஹீனே காத்திஆ-பக்-51)

பூமான் நபியின் அறிவு ஞானத்தில் ஷைத்தானோடு ஒப்பீடு செய்த இந்த முனாபிக்கை என்னவென்று சொல்வது?

தேவ்பந்திய கலாசாலையின் நான்காவது இமாமும், தப்லீக் ஜமாஅத்தின் மூலம் தான் அஷ்ரப் அலி தானவியின் கொள்கையை பரவச் செய்யப் போகின்றேன் என்று தப்லீக் ஜமாஅத்தின் ஸ்தாபகர் இல்யாஸ் காந்தலவி பெருமையாக பேசிய அஷ்ரப் அலி தானவீ ஹிஜ்ரி 1319 கி.பி. 1901-ல் ஹிப்ளுல் ஈமான் என்னும் ஒரு நூலை எழுதினார் அவற்றில் உள்ள நச்சுக் கருத்துக்களிலிருந்து சில :-

1. நபிகளாருக்கு மறைவான விஷயங்களை அறியக் கூடிய ஞானம் உண்டு என்று ஒரு ஆதாரப்படி எடுத்துக் கொண்டாலும், நபிகளாருக்கு மறைவான விஷயங்கள் எல்லாமே தெரியுமா? அல்லது ஒரு சில விஷயங்கள் மட்டும் தான் தெரியுமா? ஏனெனில் ஒருசில விஷயங்கள் தான் தெரியும் என்று எடுத்துக் கொண்டால் அதில் நபிகளாருக்கு என்ன தனிச்சிறப்பு இருக்கின்றது? ஒரு சில மறைவான விஷயங்கள் சாதாரண மனிதர்கள், குழந்தைகள், பைத்தியங்கள் இவ்வளவு ஏன் கால்நடைகள், மிருகங்களுக்குக் கூட தெரியுமே! (ஹிப்ளுல் ஈமான் - பக்கம் - 8)

பூமான் நபியின் கல்வி ஞானம் (இல்முல் ஙைப்) விஷயத்தில் நாகூசாமல் எழுதிய இந்த முனாபிக்கை என்னவென்பது?

தப்லீக் ஜமாஅத்தின் ஸ்தாபகர் மௌலவி இல்யாஸ் வஹ்ஹாபிய்ய உலமாக்களின் சகவாசத்திலும், அவர்களின் கண்காணிப்பிலும் இருந்தார். மேலும் வஹ்ஹாபிய்ய மத ஆர்வத்திலேயே வளர்ந்தார். அவர்களின் குண நலன்களையே (கொள்கைகளை) பூண்டார்.

10 வருட காலத்தை வஹ்ஹாபிகளுடனேயே கழித்திருந்தார். ஆரம்பமாக ரஷீத்அஹ்மது கங்கோஹியிடம் பைஅத் பெற்றார். அவர் இறந்தப்பின்னர் கலீல் அஹ்மது அம்பேட்டியிடம் பைஅத் பெற்றார். மேலும் வஹ்ஹாபிய்ய கூடாரமான ஸஹாரன்பூரில் உள்ள மளாஹிருல் உலூம் என்ற மத்ரஸாவில் ஆசிரியராக பணியாற்றினார்.

மேலும் இலீயாஸ் காந்தலவீ எழுதிய நூலான மல்பூளாத்திலிருந்து சில :-

1. தப்லீக்கின் முறை எனக்கு கனவில் வெளியாயிற்று - அல்லாஹ்வின் வசனமாக குன்தும் கைற உம்மத்தின்... ஜனங்கள் அளவில் அனுப்பப்பட்ட விஷேச உம்மத்தாக நீங்கள் ஆகிவிட்டீர்கள். நீங்கள் நல்லவற்றைக் கொண்டு ஏவவும், கெட்டவற்றை விட்டு விலக்கவும் அல்லாஹ்வைக் கொண்டு ஈமான் கொள்ளவும்.... என்ற திருமறை வசனத்திற்கு வியாக்கியானம் நீவிர் நபிமார்களைப் போன்றவர். உம்மை ஜனங்களுக்காக வெளியாக்கப்பட்டது. என்பதாக கனவில் எனக்கு அறிவிக்கப்பட்டது.

மல்பூளாத்து - பக்கம் - 40

2. ஜஹீருல் ஹஸன் மக்கள் நினைக்கின்றார்கள்; தப்லீக் இயக்கம் தொழுகைக்கு அழைக்கும் இயக்கம் என்று நான் அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்து சொல்கின்றேன். இது ஒரு போதும் தொழுகைக்கு அழைக்கும் இயக்கமல்ல; மாறாக புதியதோர் கூட்டத்தை உருவாக்கும் இயக்கமே. - இல்யாஸின் மல்பூளாத்

மேலும் இல்யாஸ் 14.3.1938-ல் அரேபியா சென்று வஹ்ஹாபிய கொள்கையை தந்திரமாக பரப்ப, தான் வகுத்துள்ள திட்டங்களை சவூதி அரசிடம் விளக்கி கூறி ஆதரவு கேட்டுப் பெற்றார்.

வஹ்ஹாபிஸ கருத்துக்களை மக்கள் மத்தியில் பரப்பி தனக்கென ஒரு கூட்டத்தை உருவாக்கினார்.

மேற்கண்டவர்களின் நச்சுக் கருத்துக்களையும், அவரின் கொள்கை கோட்பாடுகளையும் தலைதூக்கி, புகழ்ந்து பின்பற்றும் கூட்டத்தார்களையே 'தப்லீக் ஜமாஅத்தினர்கள்' - என்று அழைக்கப்படுகின்றார்கள்.

**தவ்ஹீத் ஜமாஅத்தினர் :-**

1982-ல் தமிழ்நாட்டில் முதன் முதலாக ஒரு புதிய கருத்தை ஆரம்பம் செய்தனர். அது என்னவெனில் இஸ்லாத்தை மத்ஹப்புகள் கூறு போட்டு பிரிக்கின்றது. எனவே மத்ஹப்பை பின்பற்றுவதா? குர்ஆன் ஹதீஸை பின்பற்றுவதா? என்ற கேள்வியை போட்டு மக்களின் மனதை குழப்பி மத்ஹப்பை பின்பற்றுவது வழிகேடு என்ற நிலைக்கு உள்ளாக்கினர். இதில் சில கூட்டம் ஆமாம் சாமி என்று சொல்லி சென்றது. அதன் பின்னர் இமாம்களை கையில் எடுத்தது. அவர்கள் யார்? மனிதர் தானே அவர்களின் சொல்லை எடுப்பதா? நபியவர்களின் சொல்லை எடுப்பதா? என்று கேள்வி எழுப்பி மக்களை குழப்பி இமாம்களின் மீது வெறுப்பை ஊட்டி அவர்களின் சொல்லை புறக்கணிக்கச் செய்தனர். அதன் பின்னர் ஸஹாபாக்கள் யார்? அவர்களும் மனிதர்கள் தானே அவர்கள் தவறு செய்பவர்கள் இல்லையா? (நவூது பில்லாஹ்) என்று சொல்லி அவர்களின் சொல்லை ஏற்பதா? இறைவனின் கூற்றையும், நபியவர்களின் கூற்றை ஏற்பதா? என கேள்வி எழுப்பி மக்களை குழப்பி ஸஹாபாக்கள் மீது வெறுப்பையும், காழ்ப்புணர்வையும், அவமரியாதையையும் எற்படச் செய்தனர். அதன் பின்னர் நபியவர்கள் மீது ஒரு அபாண்டமான குற்றச்சாட்டை பிரச்சாரம் செய்தனர். அவை என்னவெனில் வஹீ வந்தசெய்திகள், வஹீ இல்லாமல் நபியவர்கள் சுயமாக சொன்ன செய்திகள் இரண்டு வகை. இதில் வஹீ உள்ள செய்திகளைத் தான் பின்பற்ற வேண்டும். அவையல்லாத செய்திகளைக் பின்பற்றக் கூடாது என்று மக்களை குழப்பி நபியவர்களின் சொல் மீதே சந்தேகத்தை உண்டு பண்ணி பூமான் நபி மீதுள்ள மதிப்பையும், கண்ணியத்தையும் குறைத்து பிரச்சாரம் செய்தனர். அதன் பின்னர் இறைவனின் வேதமான

அல்குர்ஆன் ஷரீஃபிலும் எழுத்துப் பிழை உள்ளது என்றும் ஒருவித புதிய மாயத்தோற்றத்தை உண்டு பண்ணி குர்ஆன் முழுமையாக பாதுகாக்கப்படவில்லை என்ற நச்சுக்கருத்தை மக்களிடையே பிரச்சாரம் செய்தனர். இந்த கூட்டத்தார்கள் வலிமார்களைப் பற்றி கூற வேண்டிய அவசியமே இல்லை. (நவூது பில்லாஹ்) அந்தளவுக்கு வசைபாடி, வஞ்சித்து பிரச்சாரம் செய்தனர். மத்ஹப் 4 ஆக பிரிக்கின்றது, வாருங்கள் ஒற்றுமையாக இருப்போம் என்று 40 ஆக பிரிந்துள்ளார்கள் இந்த கொடுங்கோலர்கள். இவர்களின் கொள்கையுள்ள பிரிவினை வாதிகள் வருமாறு:- தவ்ஹீத் ஜமாஅத், தமிழ் நாடு முஸ்லிம் முன்னேற்ற கழகம், இந்திய தவ்ஹீத் ஜமாஅத், ஜம்இய்யத்துல் அஹ்லில் வல்குர்ஆன் ஹதீஸ், ஹிஜ்ராகமிட்டி குழு, ஜமாஅத்துல் முஸ்லிமீன் ஜமாஅத், பாப்புலர் பிரண்ட் ஆஃப் இந்தியா, மனித நீதிப் பாசறை, ஜ.மு.முக. தாருல் இஸ்லாம்... இன்னும் ஏராளம்...

'தவ்ஹீத் ஜமாஅத்' என்று கூறும் கூட்டத்தார்களின் நச்சு வித கருத்துக்களில் சிலவற்றை இங்கு பார்ப்போம்.

1. இப்னுதைமிய்யா, அப்துல் வஹ்ஹாப் நஜ்தீ போன்றவர்களின் கொள்கைகளையும், நூல்களையும் தலைமேல் வைத்து புகழ்ந்து அவற்றை பின்பற்றுவது...

2. மத்ஹப் வேண்டாம், மேலும் தொழுகையில் கையை நெஞ்சுக்கு மேல் கட்டுவது, கால்களை அகட்டி வைப்பது, அத்தஹிய்யாத் இருப்பில் விரலை ஆட்டுவது, தொப்பியில்லாமல் தொழுவது, கூட்டு துஆ கேட்க மறுப்பது, ஸலவாத் சொல்ல மறுப்பது, வஸீலா கேட்பது கூடாது என்பது ஈஸால் தவாப் செய்வது கூடாது. தராவீஹ் 8 ரக்அத் என்பது, ஸஹாபாக்களின் மீது (தராவீஹில்) தஸ்பீஹாத்துகள் ஓதகூடாது என்பது, மௌலித் ஓத கூடாது என்பது, மீலாத் விழா எடுப்பது கூடாது என்பது, வலிமார்களின் உரூஸ் கூடாது என்பது குர்ஆனை சுத்தமின்றி தொடலாம், ஓதலாம் என்பது, இறைவனுக்கு உருவம் உண்டு என்பது, ஜியாரத்திற்கு (வலிமார்களின் இடத்துக்கு) போவது கூடாது என்பது, மகான்களை, பெரியோர்களை மதிப்பில்லாமல் பேசுவது, எழுதுவது என்பது, ஓதிபார்க்க, துஆ (தாயத்து) அணிய கூடாது

என்பது, கப்ருஷரீஃபை கட்டுவது கூடாது என்பது, நபியவர்களைக் கொண்டு சுவனம் செல்வது என்பது கிடையாது என்பது... ஏராளம், ஏராளம்... இந்த கேடு கெட்ட வஹ்ஹாபியர்களின் கொள்கைகளும், கருத்துக்களும் சொல்லி மாளாத அளவுக்கு விரிந்து கிடக்கின்றது.

இத்தகைய்ய கேடு கெட்டவர்களின் கொள்கைகளையும், கருத்துக்களையும் தலைமேல் தூக்கி வைத்து, புகழ்ந்து, குர்ஆன் ஹதீஸ் போர்வையில் பசுத்தோல் போர்த்திய புலிகளாக உலாவருகின்றவர்களையே 'வஹ்ஹாபிகள்' என்று அழைக்கப்படுகின்றனர்.

**சுன்னத்வல் ஜமாஅத் :-**

1) மனதார இறைவனையும் அவனின் தூதர் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களையும் ஏற்றுக் கொண்டு அஹ்லுல் சுன்னா (குர்ஆன், ஹதீஸ்) அவர்களின் வழிமுறையை பிசகாமல் பின்பற்றுகின்ற கூட்டத்தினராகிய ஸஹாபாக்களையும், (ஜமாஅத்), இமாம்களின் (இஜ்மா, கியாஸ்), ஆய்வுகளை ஏற்றுக் கொண்டு, வலிமார்களின் சிறப்புகளையும் மதித்து வாழ்பவரை பின்பற்றி நடக்கின்றவர்களையே சுன்னத்வல் ஜமாஅத்தினர் என்று அழைக்கப்படுகின்றார்கள். இவற்றிற்கு குர்ஆன் ஹதீஸ் மூலம் ஆதாரங்களைப் பார்ப்போம்.

இறைவன் தன் திருமறையில் : நீ எங்களை நேரான வழியில் நடத்துவாயாக! அவ்வழி எவர்களுக்கு நீ அருள் புரிந்தாயோ அவர்கள் சென்ற வழி உன் கோபத்திற்கு உள்ளானவர்களோ, வழி தவறியவர்களோ சென்ற வழியல்ல... அல்குர்ஆன் (1:6,7)

மேலும் இறைவன் தன் திருமறையில் கூறுகின்றான் : எவர்கள் அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும் வழிப்படுகின்றார்களோ, அவர்கள் அல்லாஹ் அருள் செய்த நபிமார்கள், சத்தியவான்கள், சன்மார்க்கப் போரில் உயிர்நீத்த தியாகிகள், நல்லொழுக்கம் உடையவர்கள். (சாலிஹீன்கள்) ஆகியவர்களுடன் மறுமையில் வசிப்பார்கள். இவர்கள் தாம் மிக அழகான தோழர்கள் ஆவர்.

அல்குர்ஆன் ( 4:69)

மேற்கண்ட வசனம் யார் சுவனவாசிகள்? யாரோடு தோழமை கொண்டால் நல்லது எனவும் மேலும் இவர்களின் வழியில் நடந்தால் தான் இறைபொருத்தம் கிடைக்கும் என்பதையும் தெளிவுபடுத்துகின்றது.

1. நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சொன்னார்கள்:

“இஸ்ரவேல் சமுதாயம் 72 கூட்டமாக பிரிந்து விட்டனர். என்னுடைய உம்மத்துகள் 73 ஆக பிரிவார்கள். ஒரு கூட்டத்தை தவிர, அனைவரும் நரகம் சென்று விடுவார்கள். சொர்க்கம் செல்லுகின்ற அந்த கூட்டம் யார்? யாரசூலல்லாஹ்! வெற்றி பெற்ற கூட்டம் எதுவென்று ஸஹாபாக்கள் கேட்டதற்கு நானும் எனது தோழர்களும் (ஸஹாபாக்கள்) இருக்கின்ற வழி தான் - என்று சொன்னார்கள்.”

அறிவிப்பு : செய்யிதினா உமர் (றளியல்லாஹு அன்ஹு)
நூல் : திர்மிதீ (2641, 2643, 2650)
மிஷ்காத் : (ஹ.எண். 171) பாபு இஃதிஸாம்

2. நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சொன்னார்கள் :

“என்னுடைய உம்மத்துகள் அனைவரும் வழிகேட்டில் ஒன்று சேர மாட்டார்கள். நீங்கள் கருத்து வேறுபாடுகளை கண்டால் பெரும் கூட்டத்தை பின்பற்றுங்கள்.”

அறிவிப்பு : அனஸ் றளியல்லாஹு அன்ஹு நூல் : இப்னுமாஜா (3950)

3. நபி நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சொன்னார்கள் :

“நிச்சயமாக! ஷைத்தான் மனிதனுக்கு ஓநாயாகயிருக்கின்றான். தனித்திருக்கும் ஆட்டையும், மேய்ச்சலுக்காக வெகுதூரத்திற்குச் சென்ற ஆட்டையும், ஓநாய் பிடித்துச் செல்வது போல மனிதனை ஷைத்தான் பிடித்து சென்று விடுவான். உங்களுக்கு நான்

எச்சரிக்கை செய்கின்றேன். நீங்கள் 'ஜமாஅத்தை' பற்றி பிடித்துக் கொள்ளுங்கள்."

அறிவிப்பு : செய்யிதினா முஆது இப்னு ஜபல் றளியல்லாஹு அன்ஹு,
நூல் : அஹ்மது

4. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சொன்னார்கள் :

"எனக்குப் பின்னர் அபூபக்கர் றளியல்லாஹு அன்ஹு, உமர் றளியல்லாஹு அன்ஹு அவர்களைப் பின்பற்றுங்கள்."

அறிவிப்பு : செய்யிதினா ஹுதைபா றளியல்லாஹு அன்ஹு)
நூல் : திர்மிதீ 3663, இப்னுமாஜா (10) முஸ்தத்ரக் (3/75)
முஸ்னது அஹ்மது 23276

5. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சொன்னார்கள் :

"எனக்குப் பின்னால் மிக கடுமையான குழப்பங்களை பார்ப்பீர்கள். அந்த நேரத்தில், என்னுடைய வழிமுறைகளையும், நல்ல நேர்வழிகாட்டிகளான குலபாவு ராஷிதீன்கள் அவர்களுடைய வழிமுறைகளையும் பற்றிப் பிடித்துக் கொள்ளுங்கள். இந்த வழிமுறைகளை கடவாய் பற்களைக் கொண்டு கடித்து பிடித்துக் கொள்ளுங்கள்."

அறிவிப்பு : செய்யிதினா இர்பாழ் இப்னு ஸாரிய்யா றளியல்லாஹு அன்ஹு
நூல் : இப்னு மாஜா (42)
அஹ்மது (17,144), திர்மிதீ (2685), அபூதாவூது (4607),
மிஷ்காத் (பக்கம்-30), தாரமீ (44)

6. செய்யிதினா ஹுதைபா றளியல்லாஹு அன்ஹு அவர்கள் சொன்னார்கள் :

"நான் உங்களுடன் இருப்பதை குறைவாகவே கருதுகின்றேன். எனவே எனக்குப் பின்னர் அபூபக்கர் றளியல்லாஹு அன்ஹு, உமர் றளியல்லாஹு அன்ஹு அவர்களை பின்பற்றுங்கள். அம்மார் றளியல்லாஹு அன்ஹு அவர்களின் வழிகாட்டலையும்

பின்பற்றுங்கள். மேலும் இப்னுமஸ்வூத் றளியல்லாஹு அன்ஹு அவர்கள் எதையாவது சொன்னால் அதையும் ஏற்றுக் கொள்ளுங்கள் என்று பூமான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சொன்னார்கள்."

நூல் : திர்மிதீ (3663), இப்னுமாஜா (97), ஹாகிம் (3/75), அஹ்மது (5/399), இப்னு அபீஷைபா (12/11)

7. ஸஹாபாக்களின் வழிமுறையை பற்றி நடந்தால் சுவனம் கிடைக்கும் என்பதை இறைவன் தனது திருமறையில் :

"முஹாஜிர்களிலும் (மக்காவாசிகள்), அன்ஸார்களிலும் (மதீனாவாசிகள்) எவர்கள் இஸ்லாத்தில் முதலாவதாக முந்திக் கொண்டு நம்பிக்கை கொண்டார்களோ, அவர்களையும் நற்செயல்களில் (மெய்யாகவே) இவர்களைப் பின்பற்றியவர்களையும், பற்றி அல்லாஹ் திருப்தியடைகின்றான். இவர்களும் அல்லாஹ்வைப் பற்றி திருப்தியடைகின்றனர். அன்றி; தொடர்ந்து நீரருவிகள் ஓடிக் கொண்டிருக்கும் சுவனபதிகளை இவர்களுக்கென தயார்படுத்தி வைத்திருக்கின்றான். அவற்றிலேயே அவர்கள் என்றென்றும் தங்கி விடுவார்கள். இது தான் மகத்தான பெரும் வெற்றியாகும்.

அல்குர்ஆன் (9:100)

8. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சொன்னார்கள் :

"எனது சமுதாயத்தில் சிறந்தவர்கள், என் காலத்தவர்கள் (ஸஹாபாக்கள்) பின்னர் அவர்களை அடுத்து வருபவர்கள் (தாபியீன்கள்) பின்னர் அவர்களை அடுத்து வருபவர்கள் (தபஊத்தாபியீன்கள்) மிக சிறந்தவர்கள்."

அறிவிப்பு:- இம்ரான் பின் ஹுஸைன் றளியல்லாஹு அன்ஹு
நூல் : புகாரி, (2651, 6428, 6695) முஸ்லிம், மிஷ்காத் (553)

9. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சொன்னார்கள் :

"எனது உம்மத்தை வழிகேட்டில் இறைவன் ஒன்று சேர்க்க மாட்டான். இறைவனுடைய உதவி கூட்டமைப்பின் மீதே இருக்கின்றது. யார் தனித்து பிரிந்து விடுகின்றாரோ அவர் நரகத்திலும் தனித்தே இருப்பார்."

அறிவிப்பு : செய்யிதினா இப்னு உமர் றளியல்லாஹு அன்ஹு
நூல் : திர்மிதீ (2167)

10. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சொன்னார்கள் :

"என்னுடைய தோழர்கள் நட்சத்திரங்களுக்கு சமமானவர்கள். அவர்களில் யாரை நீங்கள் பின் தொடர்ந்தாலும் நேர்வழியைப் பெற்றுவிடுவீர்கள்."

நூல் : ரஜீன், (மிஷ்காத் புக்கம் 554)

11. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சொன்னார்கள் :

"இறைவன் நபிமார்கள், ரசூல்மார்கள், அல்லாத ஏனைய மக்களில் எனது ஸஹாபாக்களை சிறப்பானவர்களாகத் தேர்ந்து எடுத்தான். அவர்களில் அபூபக்கர் றளியல்லாஹு அன்ஹு, உமர் றளியல்லாஹு அன்ஹு, உஸ்மான் றளியல்லாஹு அன்ஹு, அலி றளியல்லாஹு அன்ஹு ஆகியோரை சிறந்தவர்களாக தேர்ந்து எடுத்தான். ஒவ்வொரு ஸஹாபியிடமும் நலவே இருக்கின்றது. எவரொருவர் உமரை நேசிப்பாரோ அவர் என்னை நேசிப்பவராவர். எவரொருவர் உமரை கோபமுறச் செய்வாரோ அவர் என்னை கோபமுறச் செய்தவராவார்."

அறிவிப்பு : செய்யிதினா ஜாபிர் றளியல்லாஹு அன்ஹு
நூல் : கிதாபுஷ் ஷிபா (பாகம்-2, பக்கம்-43)

மேற்கண்ட ஆதாரங்களின் அடிப்படையில் தான் சுன்னத்வல் ஜமாஅத் - என்ற பெயர் வந்தது. இறைவனையும், அவனுடைய திருத்தூதர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களையும், அவர்களின் தோழர்களாகிய ஸஹாபாத்

தோழர்களின் கூட்டங்களையும், மதிப்பிற்குரிய இமாம்களையும், நல்லடியார்களான இறைநேசச் செல்வர்களையும் ஏற்று வாழ்பவரே மேற்கண்ட பெயருக்கு உரித்தானவர்கள் ஆவர்.

1) சுன்னத்வல் ஜமாஅத் பெயர் விளக்கம்:- ஹிஜ்ரி 4ம் நூற்றாண்டில் வாழ்ந்த இமாம் அபுல் ஹஸன் அல் அஷ்அரீ றளியல்லாஹு அன்ஹு அவர்கள் தமது ஆசிரியர் அபூ அலிய்யில் ஜுப்பாயி என்ற முஃதஸிலீ [மாற்று கொள்கைக்காரர்] தலைவருடன் வாதாடி அவருடைய கொள்கைகளை (கருத்துக்களை) முறியடித்துவிட்டு சுன்னத் என்னும் நபி வழியையும், ஜமாஅத் என்னும் ஸஹாபாக்கள், தாபியீன்கள், தபஉத்தாபியீன்கள், நான்கு மத்ஹபுகளின் இமாம்கள் றளியல்லாஹு அன்ஹுமா ஆகியோர்களது வழிமுறைகளைப் பின்பற்றி நடக்கத் துவங்கினார்கள். அதற்குப் பின்னர் 1000 வருடத்திற்கு மேலாக இமாமுனா அஷ்-அரீ றளியல்லாஹு அன்ஹு அவர்களின் கொள்கைகளை ஏற்றுக் கொண்ட அனைவருக்கும் அஹ்லுல் சுன்னத் வல்ஜமாஅத் என்ற பெயர் வழங்கப்படலாயிற்று.

2) பெயர் விளக்கம் : சுன்னத்- என்ற அரபிச் சொல்லுக்கு வழிமுறை ஆச்சாரம் என்பது அகராதிப் பொருள். இதனுடைய மரபுப் பொருள் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மொழிந்த சொற்கள், செய்த செயல்கள், மௌன அனுமதிகள் என்பதாகும்.

நூல் : பத்ஹுல்பாரி (பாகம்-3, பக்கம் 17)

3) ஜமாஅத்:- ஜமாஅத் என்ற அரபிச் சொல்லுக்கு கூட்டம் என்பது அகராதிப் பொருளாகும். முஸ்லிம் ஜமாஅத்தினரையும், அவர்களின் இமாமையும் பற்றிப் பிடி.

நூல் : புகாரி (பாகம்-1, பக்கம்-509)

மேற்கண்ட ஹதீஸிலிருந்து தான் சுன்னத்வல் ஜமாஅத் என்பதிலுள்ள ஜமாஅத் என்ற பதம் எடுக்கப்பட்டுள்ளது.

நூல் : பைளுல் பாரி - ஷரஹுபுகாரி (பாகம்-4, பக்கம் 58)

சங்கை மிகுந்த ஸஹாபாக்கள், மேன்மை மிக்க இமாம்கள் ஆகியோரையே ஜமாஅத் என்பதின் மரபுப் பொருளாக கருதப்படுகின்றது.

நூல் : நிப்ராஸ் சரஹு சரஹி அகாயிதீன் நஸபீ (பக்கம்-22)

4) சுவனம் செல்லும் கூட்டம்:- மறுமை நாளில் சில கூட்டத்தார்கள் வருவார்கள். அவர்களின் முகம் பிரகாசமாகயிருப்பார்கள். இன்னும் சிலர் வருவார்கள், அவர்களின் முகம் இருளடைந்து கருப்பாக காணப்படுவார்கள்.

அல்குர்ஆன் (3:106, 107)

மேற்கண்ட இறைமறையின் ஆயத்துக்கு தப்ஸீரின் தலைமை இமாம் செய்யிதினா இப்னு அப்பாஸ் றளியல்லாஹு அன்ஹு அவர்களின் கூற்று:-

மறுமையில் முகம் வெண்மையாக (பிரகாசமாக) காட்சியளிக்கும் கூட்டத்தார் யாரெனில் அஹ்லுல் சுன்னா வல்ஜமாஆ கூட்டத்தாராகும். மறுமையில் முகம் கருப்பாக, கைசேதமாக கவலை முகத்துடன் காட்சியளிக்கும் கூட்டத்தார் யாரெனில் பித்அத்காரர்கள் (நவீன கொள்கை வாதிகள்) மற்றும் பல பிரிவினைக்காரர்கள் ஆவர்.

நூல் : தப்ஸீர் இப்னு கஸீர் (பாகம்-1, பக்கம்391) தப்ஸீர்சாவி

சுன்னத் வல் ஜமாஅத்தின் கொள்கை உடையவர்களின் சில கொள்கைகளை நாம் சற்று பார்ப்போம்:- 1. நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை தன் உயிரைவிடவும் தன் பொருள், குடும்பம், உற்றார், உறவினர்கள் அனைவரையும் விட நேசித்து முஹப்பத் வைப்பது. 2. ஸஹாபாக்கள், தாபியின்கள், தபவுத் தாபியீன்கள், இமாம்கள் ஆகியோரை மதித்து அவர்களின் வழிகாட்டுதலின் மீது செயல்படுதல். 3. இறைநேச செல்வர்களான அவுலியாக்கள் அனைவர்களின் மீதும் முஹப்பத் வைத்து அவர்களின் நேசத்தை அடைந்து செயல்படுதல். 4. நபியவர்களின் மீலாது, மவ்லித், இறைநேசர்கள் மவ்லித், உட்பட செயல்படுத்துவது.

5. இறைநேசர்களின் உரூஸ் மற்றும் அவர்களிடமும், நபியவர்களிடமும் வஸீலா தேடுவதை செயல்படுத்துவது. 6. திக்ரு, ராத்திபு, மஜ்லிஸ், கான்காக்களின் ஸலவாத் மஜ்லிஸ், ஈஸால் தவாப் செய்வது போன்ற நற்காரியங்களை செயல்படுத்துவது. 7. மத்ஹறப்புகளின் சட்டங்களை நான்கில் (ஷாபிஈ, ஹனபி, ஹன்பலி மாலிக்கி) ஏதாவது ஒன்றை ஏற்று செயல்படுத்துவது. 8. தொழுகையின் அழைப்பான பாங்கிற்கு முன்னர் ஸலவாத் சொல்வது. நாரிய்யா ஸலவாத் ஓதுவது, புர்தா ஷரீஃப் ஓதுவது, தஸ்பீஹாத்துகள் ஓதுவது போன்ற நற்காரியங்களை செயல்படுத்துவது. 9. நபிமார்கள், சாலிஹீன்கள், நல்லடியார்கள், வலிமார்கள், மௌத்திற்குப் பின்பும் உயிருடன் வாழ்கின்றார்கள். மேலும் அவர்களால் உதவிகள் செய்ய முடியும் என்பதையும் நம்பி செயல்படுத்துவது.

மேலும் இவை போன்று ஏராளம்... ஏராளம் இருக்கின்றது. இவைகள் அனைத்தும் சுன்னத் வல் ஜமாஅத்தின் நம்பிக்கை கொள்கையாகும். இவைகளை அடிபிறழாமல் பின்பற்றி நடப்பவர்களே அஹ்லுல் சுன்னத் வல்ஜமாஅத்தினர்களாகும்.

**முடிவுரை:-**

என் அன்பார்ந்த இஸ்லாமிய சகோதர, சகோதரிகளே! இந்த சமுதாயத்தில் வந்த குழப்பங்கள் (ஃபித்னா) மார்க்கத்தின் பெயரால் உலாவந்ததை நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் முதல் இன்று வரை நிலவுகின்ற அனைத்தையும் ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம் - என்ற அடிப்படையில் கொஞ்சமாக விளக்கித் தந்துள்ளேன். சத்தியத்தின் பாதை எது? அசத்தியத்தின் பாதை எது? எனவும் விளக்கிச் சொல்லியுள்ளேன். எனவே அசத்தியத்தின் கொள்கைகளையும், அதன் அமைப்புகளிடமும் போய் விழுந்து தனது ஈமானை இழந்து நரகத்தின் படுகுழியில் வீழாமல் சத்தியத்தின் வழியில் நடந்து நல் அமல்கள் செய்து நாளை மறுமையில் பூமான் நபியுடன் ஜன்னத்துல் ஃபிர்தவ்ஸ் என்னும் உயர்ந்த சுவனபதியில் இருக்க

எல்லாம் வல்ல அல்லாஹுத் தஅலா நாடி நற்கிருபை செய்வானாக ஆமீன்! யாரப்பல் ஆலமீன்.

இறைவா! சத்தியத்தை சத்தியமாக ஏற்றுநடப்பதையும், அசத்தியத்தை அசத்தியமாக விளங்கி அதனை விட்டும் தூரவிலகி வாழ்வதற்கும் நல்லருள் புரிவாயாக! என துஆவுடன் நிறைவு செய்கின்றேன். - வஸ்ஸலாம்.

ஸல்லல்லாஹு அலா முஹம்மது
ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்!

ஸல்லல்லாஹு அலா முஹம்மது
ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்!

ஸல்லல்லாஹு அலா முஹம்மது
யாரப்பி ஸல்லி வ அலைஹி வஸல்லம்!